
எங்கள் வீட்டில் எப்பொழுதும் டால்டாவையே சமையல் செய்ய தேர்ந்தெடுக்கிறோம்—அது நாங்கள் அன்றாடம் செலவு செய்யும் சக்தியை ஈடுசெய்ய உதவுகிறது!
DALDA
டால்டா
சமநிலை உணவில் உங்களுக்குத்தேவையான கொழுப்பைக் கொடுக்கிறது
HVM. 144-X30 TM

சென்னை - சித்ரா & ஸ்ரீ கிருஷ்ணா

மற்றும் தமிழ் நாடெங்கும்




நேஷனல் புரொடக்ஷன்ஸ்
சிங்காரி
சென்னையிலும்
மற்றும்
தமிழ் நாடெங்கும்
வெற்றிகரமாக
நடைபெறுகிறது!
குமரவேல் ரிலீஸ்

# பொருள் அடக்கம்

கல்கி

மலர் 11 இதழ் 15 | 1951 நவம்பர் 11 | கர ௵ ஐப்பசி 25உ





பிரமன் தன் மலர்போன்ற கரங்களில் எத்தனையோ உருவங்களைப் படைத்தான். மன்மதனை நிகர்த்த ஆடவர்களைப் படைத்திருக்கிறான்; ரதிக் கிளியை ஒத்த ஆரணங்குகளைப் படைத்திருக்கிறான். யுகம் யுகமாக இப்படிப் படைத்து அவன் கைக்கு நல்ல பழக்கம் ஏற்பட்டிருக்கிறது. அந்தப் பழக்கத்தில் இந்த இதழ் அட்டையில் தோன்றும் ஆரணங்கையும் அந்த நான்முகன் படைத்து விட்டானோ என்று எண்ணிவிடப் போகிறீர்கள்.




அப்படிப் படைக்கவில்லை என்கிறான் இந்த இதழ் அட்டைச் சித்திரத்தில் தோன்றும் அணங்கின் ஆருயிர்க் காதலன்.

பின் எப்படிப் படைத்தான்!

அவளைச் சிருஷ்டிக்கு முன் பிரமதேவன் தண்ணிலவைப் பொழியும் சந்திரனின் காந்தியை எடுத்து வைத்துக் கொண்டான். அத்துடன் நின்று விடவில்லை. அப்பொழுது அலர்ந்த செந்தாமரையின் புது மலர்ச்சியையும் எடுத்து வைத்துக் கொண்டான்.

இனி, பிரமன் எப்படிச் சிருஷ்டிக்கிறான் பாருங்கள்.

சீத மதியின் ஒளியும் செழுங்கமலப்
போதின் புதுமலர்ச்சி யுங்கொண்டு—வேதாதன்
கைம்மலரான் அன்றிக் கருத்தால் வகுத்தமைத்தான்
மொய்ம்மலர்ப் பூங்கோதை முகம்.

[வேதா—பிரமன்]

உள்ளத்தில் ஆயிரம் எண்ணங்கள் அலைமோதினால் எழுத்தில், வர்ணத்தில், சிற்பத்தில், சங்கீதத்தில் ஒரு எண்ணம்தான் வெளி வரும். கற்பனையி லுள்ளதெல்லாம் வெளியாவ தில்லையே என்ற ஏக்கம் கலைஞர்களுக்குண்டு. அப்படிப்பட்ட ஏக்கம், பிரம்மதேவன் என்ற கலைஞனுக்கும் இருந்து வந்தது. அழகிகளில் எல்லாம் சிறந்த அழகியை—, தன் கற்பனையில் கண்டு மகிழும் அழகியைச் சிருஷ்டிக்க வேண்டும் என்று தவங் கிடந்தான். அது இவளைப் படைத்ததின் மூலம் நிறைவேறித்து! பிரமன் தன் கற்பனையின் எல்லையை எட்டிப் பிடித்து விட்டான்! இதைக் குறிக்கத்தான் 'கருத்தால் வகுத்தமைத்தான்' என்கிறார் புலவர்.

இந்த இதழ் அட்டைச் சித்திரத்தைப் பார்க்கும்போது நமது சித்திரக்காரரும் 'கருத்தால்' தீட்டினாரோ என்று எண்ணத் தோன்றுகிறது!

# பயிற்சி!




கட்சிப் பிரசாரத்துக்காக அபேட்சகர்களுக்குப் பயிற்சி அளிக்கப்படுகிறது!

கல்கி

மலர் 11 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 15

# நெல்லுக்குப் புத்தி இல்லை!

ஆம்; கொஞ்சங் கூட நெல்லுக்குப் புத்தி இல்லை! குருவை, சம்பா, ஒட்டடையன், சிறுமணியன், கொம்பேறி மொக்கன், சிவப்புச் சம்பா, சீரகச் சம்பா, கொத்தமல்லிச் சம்பா முதலிய எந்தவித நெல்லுக்கும் புத்தி கிடையாது. புத்திதான் இல்லையே! ரோஸம், மானம், இரக்கம்,—ஏதாவது இப்படி நல்ல குணம் உண்டா? ஒன்றுமே இல்லை. நெல் மாத்திரம் என்ன? கம்பு, சோளம், ராகி, வரகு, சாமை ஆகிய உணவு தானியம் ஒன்றுக்குமே லவலேசம் புத்தி என்பது கிடையாது! மானம், ரோஸம், இரக்கம், பெருந்தன்மை என்பது கிடையாது!

"ஏதடா! நம் நாட்டுக்குச் சுதந்திரம் வந்திருக்கிறதே! புதிது புதிதாக நம்முடைய ஜனப் பிரதிநிதிகள் மந்திரிகளாக வந்து நம்மை ஆளுகிறார்களே! ஒன்றுக்கு இரண்டு மடங்காக விளைந்து வைப்போம்!" என்ற எண்ணம் எந்த உணவு தானியத்துக்காவது இருக்க வேண்டுமே? கிடையவே கிடையாது.

ஒட்டிக்கு இரட்டியாக விளைய வேண்டாம்; கொஞ்சமாவது அதிகம் விளையக் கூடாதா? எட்டில் ஒரு பங்கு அதிகம் விளையக் கூடாதா? அதிகமாக விளையக்கூட வேண்டாம்; விளைவு குறையாமலாவது இருக்கக் கூடாதா? வேண்டுமென்று அடம் பிடித்துக் குறைவாக விளைகிறது என்றால், இந்த நெல்லையும் சோளத்தையும் கம்பையும் கேழ்வரகையும் என்னதான் செய்யக் கூடாது? களத்திலே போட்டு அடி அடி என்று அடித்தும், மாடுகளை விட்டுத் துவைத்தும் புத்தி வரவில்லை என்றால், அவற்றை வேறு என்னதான் செய்வது?

இந்த இலட்சணத்தில் அரிசியின் குணத்தைப் பற்றிச் சில பேர் என்ன சொல்கிறார்கள், தெரியுமா? அரிசிச் சோறு சாப்பிடுகிறவர்களுக்கு அறிவு அதிகமாயிருக்கும் என்று சொல்கிறார்கள்! சென்னை மாகாணத்திலும் வங்காளத்திலும் அரிசி அதிகம் சாப்பிடுவதினால்தான் அங்குள்ள மனிதர்களுக்கு அறிவு அதிகமாயிருக்கிறதென்று சொல்லுகிறார்கள்! இதை எப்படி நம்புவது?

அரிசிக்கே புத்தி இல்லையே! அதிகமாக விளைய வேண்டிய சமயம் பார்த்துக் குறைவாக விளைகிறதே!—அரிசி சாப்பிடுகிறவர்களுக்கு அறிவு அதிகமாயிருக்கும் என்பதை எவ்வாறு நம்புவது?—நம்பமுடியாதுதான். பிரத்யட்ச அநுபவமும் அந்த நம்பிக்கையை வளர்ப்பதாக இல்லை.

* * * *

உலகத்திலேயே கண்டும் கேட்டும் இராத, சரித்திரம் என்றும் அறியாத, மகத்தான, பிரம்மாண்டமான, இமயத்தையும் மேருவையும் நிகர்த்த பொதுத் தேர்தல் இந்தியா தேசத்தில் நெருங்கி வந்து கொண்டிருக்கிறது என்று எல்லாரும் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் தென்னாட்டு மக்களுக்குப் பீதிமேல் பீதி உண்டாக்கக் கூடிய சில திடுக்கிடும் செய்திகள் ஒன்றன்பின் ஒன்றாக வெளியாகியிருக்கின்றன.

முப்பது நாளைக்கு முன்பு உணவு இலாகா உத்தியோகஸ்தர் ஒருவர் பெரிய கல்லைத் தூக்கிப் போடுவது போல் ஒரு செய்தியை வெளியிட்டார். "தஞ்சை ஜில்லாவில் குருவை சாகுபடி விஸ்தீரணம் குறைந்து வருகிறது! 1948-ல் 2,89,000 ஏக்கர்களில் குருவை சாகுபடி செய்யப்பட்டது. ஆனால் 1951-ல் அது 2,34,000 ஆகக் குறைந்து விட்டது. அதாவது குருவை விளையும் நிலங்களில் இந்த வருஷம் ஐம்பத்தையாயிரம் ஏக்கர்கள் குறைந்து விட்டன!" என்று அவர் கூறினார்.

இது பீதிகரமான செய்திதான். ஏனெனில் குருவை மூன்று மாதத்தில் பயிராகி அறுவடையாகும் நெல். நவம்பர் மாதத்தின் ஆரம்பத்தில் அறுவடை செய்து விடலாம். சம்பாவுக்குப் பிப்ரவரிவரை காத்திருக்க வேண்டும். நடுவில் ஒரு பட்டம்

அறுவடை பாழிவந்தால் நவம்பர்-டிசம்பர் மாதங்களில் சாதாரணமாக ஏற்படும் அரிசி கிராக்கியை ஒருவாறு சமாளிக்கலாம்.

அப்படிப்பட்ட குருவை சண்டித்தனம் பண்ணுகிறது! விஸ்தீரணமும் விளைவும் குறைந்து வருகிறது! காரணம் என்னவென்றுலோ, அதுதான் பெரிய மர்மமா யிருக்கிறது! — இவ்வாறு அந்த உணவு இலாகா உத்தியோகஸ்தர் கூறினார். அதனால் நாம் ஓரளவு பீதியடைந்து பிறகு சமாளித்துக் கொண்டோம். "குருவை இப்படிச் சண்டித்தனம் பண்ணினாலும் கடவுள் இருக்கவே இருக்கிறார்; நம் விவசாய இலாகா உணவு இலாகா மந்திரிகளும் இருக்கிறார்கள். அவர்கள் பார்த்துக் கொள்வார்கள்" என்று மனத் தேறினோம்.

குருவை விளைவு குறைகிற தென்ற பயங்கரச் செய்தி வெளியான பத்து நாளைக்குப் பிறகு நமது சென்னை மாகாண விவசாய இலாகா மந்திரி கனம் ஏ. பி. ஷெட்டி இன்னும் ஒரு பெரிய குண்டைத் தூக்கி நம் தலையிலே போட்டார்.

"சென்னை மாகாணத்தில் மொத்தத்தில் உணவு தானிய விளைவு குறைந்து வருகிறது; வருஷத்துக்கு வருஷம் குறைந்து வருகிறது. ஏன் என்று தெரியவில்லை; எதற்காக என்று தெரியவில்லை; என்ன செய்கிறது என்றும் தெரியவில்லை!" என்று கூறி ஒப்பாரி வைத்தார். அதன் மூலம் விவசாய மந்திரி என்று ஒருவர் இம் மாகாணத்தில் இருந்து வருகிறார், அவர் பெயர் கனம் ஏ. பி. ஷெட்டி என்பதைப் பொது ஜனங்களுக்கு ஞாபகப்படுத்தினார்.

ஆனால் விவசாய மந்திரியின் ஒப்பாரியைப் பற்றி நாம் அதிகம் கவலைப்படவில்லை; அதிகமாக பீதி அடையவும் இல்லை.

விவசாய இலாகாவின் போக்கே ஒரு தனி; அந்த இலாகாவைச் சேர்ந்தவர்களும் ஒருமாதிரி மனிதர்கள். கால நிலை இலாகா அதிகாரிகள் "மழை பெய்யப் போகிறது" என்று அறிவித்தால், நாம் நிம்மதியாகக் குடையை மூடி வீட்டில் வைத்துவிட்டுப் புறப்படலாம். நிச்சயமாக மழை பெய்யாது என்று நம்பலாம். விவசாய இலாகாவைச் சேர்ந்தவர்களும் அந்த ரகந்தான். அவர்கள் சொல்வதற்கு நேர்மாறாகக் காரியம் செய்தால் விவசாயிகள் உருப்படலாம். இது நெடுநாளைய அநுபவத்தில் வெளியான உண்மையல்லவா! ஆகையால் விவசாய மந்திரி சொல்வதும் அப்படித்தான் இருக்கும் என்று நினைத்தோம். "இவ்வளவு காலம் இவ்வளவு கோடிக் கணக்கான பணம் செலவிட்டு உணவு உற்பத்தியைப் பெருக்கு பெருக்கு என்று பெருக்கியபிறகு, உணவு தானிய விளைவு எப்படிக் குறைந்து வரும்! விவசாய மந்திரி ஏதோ தட்டுக் கெட்டுச் சொல்கிறார்!" என்று எண்ணி ஆறுதல் அடைந்தோம்.

ஆனால் அந்த ஆறுதலும் நீடித்திருக்கவில்லை. சென்னை அரசாங்கத்துக்குப் பொருளாதார ஆலோசகர் என்று ஓர் உத்தியோகஸ்தர் சில காலமாக இருந்து வருகிறார். அவரின் கீழ் ஒரு பெரிய காரியாலயம் நடந்து வருகிறது. பல சிப்பந்திகள் வேலை செய்து வருகிறார்கள். இந்தக் காரியாலயத்திலிருந்து வரும் தகவல்கள் எல்லாம் பெரும்பாலும் சரியாகவே இருந்து வருகின்றன.

ஆகையால் மேற்படி பொருளாதார ஆலோசகர் டாக்டர் நடராஜன் அவர்கள் கடைசியாக வெளியிட்ட அறிக்கையானது நம்முடைய மன நிம்மதியை அடியோடு குலைத்துப் பெருங் கவலையை அளித்து விட்டது.

"சென்னை மாகாணத்தில் உணவுப் பயிர் செய்யும் விஸ்தீரணமும் குறைந்து வருகிறது. உணவு தானிய விளைவும் குறைந்து வருகிறது" என்று டாக்டர் நடராஜன் புள்ளி விவரங்களின் மூலம் ஐயமற நிரூபித்து அறிக்கை வெளியிட்டிருக்கிறார்!

உணவு தானியம் உற்பத்தியாகும் நில விஸ்தீரணம் பன்னிரண்டரை லட்சம் ஏக்கரா குறைந்திருக்கிறதாம்.

இதே காலத்தில் வர்த்தகப் பொருள் உற்பத்தியாகும் நில விஸ்தீரணம் நாலரை லட்சம் அதிகமாகி யிருக்கிறதாம்.

1938–39ல் சென்னை மாகாணத்தில் 86½ லட்சம் டன் உணவு தானியம் உற்பத்தியாயிற்றாம்.

சென்ற வருஷத்தில் 58¾ லட்சம் டன்னாக உற்பத்தி குறைந்து விட்டதாம்.

இந்தப் புள்ளி விவரங்கள் யாரைத்தான் திடுக்கிடச் செய்யாம லிருக்க முடியும்!

டாக்டர் நடராஜன் அவர்களுடைய இலாகா தரும் புள்ளி விவரங்கள் விவசாய இலாகா தரும் புள்ளி விவரங்களைப் போன்றவை அல்ல. தகுந்த ஆராய்ச்சியின் பேரில் திட்டமாகக் கணக்கு எடுத்துப் புள்ளி விவரங்களைச் சேகரிக்கிறார்கள். ஆகையால் இந்த விவரங்களை நாம் நம்பத்தான் வேண்டியிருக்கிறது. நம்பிய பிறகு நமக்கு ஒரு பக்கம் கவலையும் ஏற்படுகிறது; இன்னொரு பக்கம் ஒரே ஆச்சரியமாகவும் இருக்கிறது.

அடாடா! நம்மை ஆளுகிறவர்கள் எப்பேர்ப்பட்ட கெட்டிக்காரர்கள்! எவ்வளவு நிர்வாகத் திறமை உடையவர்கள்! உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கு இவர்கள் செய்கிற முயற்சிகள் எவ்வளவு அற்புதமான பலனைத் தந்திருக்கிறது! ஒரு முழம் ஏறினால் உடனே ஒன்றேகால் முழம் இறங்கும் கெட்டிக்காரத்தனத்தை இவ்வுலகில் வேறு எங்கே காணப் போகிறோம்! — இவ்வாறெல்லாம் நாம் ஒரே ஆச்சரியத்தில் மூழ்க வேண்டி யிருக்கிறது.

*                    *                    *

டாக்டர் நடராஜன் நமக்குப் பீதியை மட்டும் உண்டாக்கி விட்டு நிறுத்தி விடவில்லை. "காரணம் என்னவோ! யார் இட்ட சாபமோ! என்ன மாயமோ! — அறிகிலேன்!" என்று கையை விரித்து விடவில்லை.

சிரமப்பட்டுக் காரணங்களைக் கண்டு பிடிக்க முயன்றிருக்கிறார்; பரிகாரங்களையும் குறிப்பிட்டிருக்கிறார்.

விளைவுக் குறைவுக்கு மழையின் பேரில் பாரத்தைப் போடுவது எவரும் செய்யக் கூடியது. "அது மட்டும் காரணமல்ல" என்று டாக்டர் நடராஜன் சொல்கிறார்.

ஏனெனில், மழை இல்லை என்னும் காரணம் மற்ற வர்த்தகப் பயிர்களுக்கும் பொருந்து மல்லவா! மழை இன்மையால் வர்த்தகப் பயிர் சாகுபடியாகும் விஸ்தீரணமும் குறைந்திருக்க வேண்டுமே! அதற்கு மாறாக அதிகரித்திருப்பதற்கு ஏதேனும் தகுந்த காரணம் இருந்து தீர வேண்டும் அல்லவா!

"உணவுப் பொருள் உற்பத்தியை அதிகப்படுத்துவதற்கு வேண்டிய ஊக்கம் விவசாயிகளுக்கு அளிக்கப்படவில்லை. அதற்கு மாறாக, உணவுப் பொருள் உற்பத்தி செய்வோருக்குச் சங்கடங்களை அதிகமாக்கி வந்திருக்கிறோம்" என்று டாக்டர் நடராஜன் திட்டவட்டமாக அறிவித்திருக்கிறார்.

புகையிலை, கரும்பு முதலிய வர்த்தகப் பயிர்கள் செய்வதில் ஆதாயம் நிரம்ப வருகிறது. அது மட்டுமல்ல; கொள் முதல் அதிகாரிகளின் கொடுமைகளுக்கு விவசாயிகள் ஆளாக வேண்டியதில்லை. வீட்டுக்குள் புகுந்து சட்டிப் பானைகளை உடைக்க மாட்டார்கள்!

உணவு தானியங்களை உற்பத்தி செய்தால் லாபமும் குறைவு; கொள்முதல் அதிகாரிகளின் கொடுமைகளுக்கும் விவசாயிகள் உள்ளாக வேண்டியிருக்கிறது.

இந்த இரண்டு காரணங்களையும் டாக்டர் நடராஜன் சுட்டிக் காட்டியிருக்கிறார். உண்மையை உள்ளபடி எடுத்துச் சொன்னதற்காகப் பொருளாதார ஆலோசகரை நாம் பாராட்டுகிறோம்.

ஆனால் அதிலிருந்து அதிகமான பலன் விளைந்து விடுமா என்பது பற்றிச் சந்தேகப் படுகிறோம்.

இதே உண்மைகளைச் சென்ற மூன்று வருஷங்களாகப் பலரும் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள்; இடித்துச் சொல்லியிருக்கிறார்கள்.

ஆயினும் யாதொரு பலனும் ஏற்படவில்லை.

உலகம் கண்டறியாத பிரம்மாண்டமான பொதுத் தேர்தல் நெருங்கி வந்து கொண்டிருந்த போதே பயன்படவில்லை என்றால், பொதுத் தேர்தலுக்குப் பிறகு எப்படிப் பயன்படும்!

இப்போது நம்மை ஆளுகிறவர்களைக் காட்டிலும் மேதாவிகள் பொதுத் தேர்தலின் பயனாக வந்து விடப் போவதில்லை. இவர்களே வரப் போகிறார்கள்; அல்லது இவர்களை விட மோசமானவர்கள் வரப் போகிறார்கள்.

ஆகையால் உணவு உற்பத்திப் பெருக்கத்துக்கும் உணவுப் பஞ்ச நிவர்த்திக்கும் ஆளுவோரை நம்புவதில் பயனில்லை.

அதைக் காட்டிலும் ஆண்டவனை நம்புவது பலன் அளிக்கலாம்.

என். ஜி. ஓ. சங்கத்தாருடன் சேர்ந்து நாமும் ஆண்டவனைப் பிரார்த்திப்போம்.

“இறைவனே! நிறைய மழையைப் பொழியுங்கள்! ஆளுவோர் செய்யும் பிசகுகளையெல்லாம் மீறி நாட்டில் உணவுப் பஞ்சம் தீருவதற்கு அருள் புரியுங்கள்!” என்று வேண்டிக் கொள்வோம்.

## கண்களைத் திறந்து பாருங்கள்

“வாயை மூடிக் கொண்டு பேசாமல் இருங்கள்; ஆனால் கண்களையும் காதுகளையும் திறந்து வைத்துக் கொள்ளுங்கள்” என்று சென்ற மகா யுத்தத்தின் போது நேச தேசத்தினர் தங்கள் சிப்பாய்களிடையும் ஜனங்களிடையும் பிரசாரம் செய்து வந்தார்கள். பேசினால், பகைவர்களுக்குத் தெரியக் கூடாத விஷயங்கள் வெளியாகிவிடக் கூடும் என்பது அவர்களுடைய பீதி. ஆனால் பகைவர்களின் இரகசியங்களை அறிந்து கொள்வதற்குக் கண்களும் காதுகளும் திறந்திருக்க வேண்டியது அவசியம் அல்லவா!

மேற்படி உபதேசத்தை இன்று உலக ராஜ தந்திரிகளும் ஐக்கிய நாடுகள் சபையும் நேர்மாறாக அனுஷ்டித்து வருகிறார்கள். வாயை எப்போதும் திறந்து கொண்டிருக்கிறார்கள். அதாவது ஓயாமல் பேசிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் பிடிவாதமாகக் கண்களையும் காதுகளையும் இறுக மூடிக் கொண்டிருக்கிறார்கள்.

அவ்விதம் இருப்பதால்தான் காஷ்மீர்மீது பாகிஸ்தான் படை யெடுத்தபோது நிகழ்ந்த கொடுமைகள் அவர்களுடைய கண்களுக்குத் தெரியவில்லை. காஷ்மீர் மக்களின் கூக்குரல் அவர்களுடைய செவிகளில் விழவில்லை.'

அவர்கள் அந்தக் கொடுமைகளைப் பார்த்திருந்தால், காஷ்மீர் மக்களின் கூக்குரலைக் கேட்டிருந்தால் காஷ்மீர் பிரச்னை தீர்ந்து இப்போது பல மாதங்கள் ஆகி யிருக்கும்.

எனவே, இப்போதாவது அவர்கள் கண்களைத் திறந்து பார்க்கட்டும்; காதுகளைத் திறந்து கேட்கட்டும். அப்படியானால் தான் இன்று காஷ்மீரில் நிகழ்ந்து வரும் அற்புதக் காட்சிகளை அவர்களால் காண முடியும்; காஷ்மீர் தலைவர்களின் முழக்கங்களை அவர்களால் கேட்க முடியும்.

காஷ்மீரின் தலைவிதியை நிர்ணயிக்கும் அதிகாரம் ஐ. நா. சபைக்கோ, அவர்களால் நியமிக்கப்படும் மத்தியஸ்தர்களுக்கோ இல்லை என்பது இப்போது நிச்சயமாகி விட்டது. “எங்கள் விதியை நிர்ணயிக்கும் உரிமை எங்களுக்குத்தான் உண்டு” என்பதைக் காஷ்மீர் மக்கள் சந்தேகத்துக்கு இடமின்றி உலகத்துக்கு அறிவித்திருக்கிறார்கள்.

சென்ற வாரம் ஸ்ரீநகரில் ஆரம்பமாகியுள்ள காஷ்மீர் அரசியல் நிர்ணய சபை அதை உலகத்துக்குப் பிரகடனப் படுத்தி யிருக்கிறது.

வயது வந்த எல்லாருக்கும் வோட்டுரிமை என்ற நியதியை அடிப்படையாகக் கொண்டே காஷ்மீர் அரசியல் நிர்ணய சபைக்குத் தேர்தல் நடந்தது. அதில் ஷேக் அப்துல்லா கட்சியினர் நூறு சத விகிதம் வெற்றி பெற்றுள்ளனர்.

அதாவது பாகிஸ்தானுக்கும் ஐக்கிய நாடுகள் சபைக்கும் காஷ்மீர் மக்கள் மேற்படி தேர்தலின் மூலம் சரியான பதில் கொடுத்து விட்டார்கள்!

காஷ்மீரின் உண்மையான தலைவர் ஷேக் அப்துல்லாதான் என்பதும், அவரது கட்சியான தேசியக் கட்சியே உண்மையான ஜனப் பிரதிநிதி ஸ்தாபனம் என்பதும், அரசியல் நிர்ணய சபைக்கு நடந்த தேர்தலின் மூலம் சிறிதும் சந்தேகத்துக்கு இடமின்றி, சர்வ நிச்சயமாகத் தெரிந்து விட்டது.

அமெரிக்காவிலிருந்து காஷ்மீருக்கு விஜயம் செய்து அங்குள்ள நிலைமையை நேரில் பார்த்த ஓர் அமெரிக்கப் பிரமுகரும் இந்த உண்மையை உலகம் அறிய ஒப்புக் கொண்டிருக்கிறார்.

“இன்று காஷ்மீரில் சர்வஜன வாக்கு எடுத்தால் ஷேக் அப்துல்லாவும் அவரது கட்சியினரும் தான் வெற்றி பெறுவார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. காஷ்மீரில் யாரைக் கேட்டாலும் எந்தக் கிராமவாசியைக் கேட்டாலும், ‘ஷேக் அப்துல்லா தான் எங்கள் தலைவர்’ என்று பளிச்சென்று கூறுவார். ஷேக் அப்துல்லாவுக்கு நாற்பத்தாறு வயதாகிறது. இதில் இருபத்தைந்து வருஷங்களுக்கு மேலாக அவர் காஷ்மீர் சுதந்திரப் போரில் ஈடுபட்டு வந்திருக்கிறார். அப்படிப்பட்டவரை ஜனங்களின் உண்மையான தலைவர் இல்லை என்று யார் கூற முடியும்! காஷ்மீரில் அவருடைய செல்வாக்கு ஈடு இணையற்றதாக இருக்கிறது” என்று ஹெரால்டு மில்க்ஸ் அமெரிக்காவில் பிரபல பத்திரிகையான “வாஷிங்டன் போஸ்டி”ல் குறிப்பிட்டிருக்கிறார்.

இந்த வார்த்தைகளாவது ஐ. நா. சபையில் வீற்றிருக்கும் உலக ராஜ தந்திரிகளின் கண்களில் படுமா! காதுகளில் விழுமா!




## அத்தியாயம் 44

# யானை மிரண்டது!

மேற்கண்டவாறு முடிவு ஏற்பட்டதும் சேநாதிபதி பூதி விக்கிரம கேசரி பார்த்திபேந்திரனைத் தனியாக அழைத்துச் சென்று சிறிது நேரம் அந்தரங்கமாகப் பேசினார். பின்னர், தம்முடன் வந்த படை வீரர்களுக்குத் தனித்தனியே சில கட்டளைகளைப் பிறப்பித்தார்.

பார்த்தி பேந்திரன் இளவரசரிடம் விடை பெற்றுக் கொண்டான். "ஐயா! நான் வந்த காரியம் நிறைவேறாமல் வெறுங் கையோடு திரும்புகிறேன். இதற்காகக் கரிகாலர் என்னை மிகவும் கோபித்துக் கொள்ளப் போகிறார். ஆயினும் என்ன செய்வது? தாங்கள் பிடிவாதமாக இருக்கிறீர்கள். என்பேரில் குற்றமில்லை. இதற்கு இங்குள்ளவர்கள் எல்லாரும் சாட்சி!" என்றான்.

இளவரசர் "அவ்வளவு அவசரமாகப் போக வேண்டுமா? தாங்களும் சேநாதிபதியோடு தொண்டைமானாறு வரை வந்து விட்டுப் போகக் கூடாதா?" என்று கேட்டார்.

"அந்தப் பாதகத்துக்கு நான் உடந்தையாயிருக்க மாட்டேன். நான் வந்த கப்பல் திரிகோணமலையில் நிற்கிறது. அங்கே போய்க் கப்பல் ஏறிக் கூடிய சீக்கிரம் நான் காஞ்சிக்குப் போக வேண்டும். கரிகாலரிடம் நடந்ததைச் சொல்ல வேண்டும்!" என்றான் பார்த்திபேந்திரன்.

பின்னர் வந்தியத் தேவனைப் பார்த்து, "வல்லத்தரையரே! என்னுடன் நீ காஞ்சிக்கு வரவில்லையா?" என்று கேட்டான்.

வந்தியத் தேவன் சிறிது திடுக்கிட்டு நின்றுவிட்டு, "இல்லை; இளவரசருடன் போக விரும்புகிறேன்" என்றான்.

"நல்லது; என்னுடன் வராததற்காகப் பிறகு வருத்தப் படுவாய்!" என்று சொல்லிவிட்டுப் பார்த்திபேந்திரன் புறப்பட்டான். சேநாதிபதியின் கட்டளையின்படி அவருடன் இன்னும் சில வீரர்களும் கிளம்பிச் சென்றார்கள்.

வந்தியத் தேவன் ஆழ்வார்க் கடியானிடம் "அந்தப் பல்லவன் கூறியதன் பொருள் என்ன? தன்னுடன் வராததற்காக நான் வருத்தப்படுவேன் என்று ஏன் கூறினான்? உமக்கு ஏதாவது தெரிகிறதா?" என்று கேட்டான்.

"சேநாதிபதியும் அவனும் கலந்து பேசி ஏதோ சூழ்ச்சி செய்திருக்கிறார்கள்! அதன் விவரம் இன்னதென்று தானே சீக்கிரத்தில் தெரியும். உண்மையில், இப்போது ஏற்பட்டிருக்கும் சங்கடத்துக்கு மூல காரணம் இந்தக் கொடும்பாளூர்க் கிழவர்தான்!" என்றான்.

"அது எப்படி? சேநாதிபதி என்ன செய்திருக்க முடியும்?"

"எல்லாம் அவருடைய வேலைதான். அவருடைய குடும்பப் பெண் ஒருத்தி பழையாறையில் வளர்கிறாள் என்பது உனக்குத் தெரியும் அல்லவா?"

"நன்றாய்த் தெரியும். வானதி தேவியைத்தானே சொல்கிறீர்?"

"ஆமாம்; அந்தப் பெண்ணை இளவரசருக்குக் கலியாணம் பண்ணிக்

கொடுத்து இலங்கை அரசராக இவருக்கு முடிசூட்டிவிட வேண்டும் என்று சேனாதிபதிக்கு ஆசை. புத்த குருக்களைக் கொண்டு இலங்கைக் கிரீடத்தை அளிக்கும்படி ஏவியவர் இவர்தான். இவருடைய முயற்சியை இரகசியமாக வைத்திருக்கவாவது தெரிந்ததா? அதுவும் இல்லை. செய்தி தஞ்சைக்கு எட்டி விட்டது. அதனால்தான் முதன் மந்திரி அநிருத்தர் இலங்கைக்கு வந்தார்; என்னையும் இளவரசரிடம் அனுப்பி வைத்தார். வந்தியத் தேவா! எது எப்படியானாலும் நம்முடைய உயிரை நாம் பத்திரமாகக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். இளவரசர் இலங்கைச் சிம்மாசனத்தை ஏற்க மறுத்தது பற்றி நீயும் நானும் தஞ்சையில் சாட்சி சொல்லும்படி நேரிடலாம்!"

இதற்குள் சேனாதிபதியின் காரியங்கள் முடிந்து விட்டன. அவருடன் வந்திருந்த படை வீரர்களில் நாலு பேரைத் தவிர மற்றவர்கள் எல்லாரும் வெவ்வேறு திசையில் புறப்பட்டுச் சென்றார்கள்.

கடைசியாக இளவரசரின் கோஷ்டியும் புறப்பட்டது. இளவரசர், சேனாதிபதி, வந்தியத் தேவன், ஆழ்வார்க்கடியான் இவர்களுடனே மேற்கூறிய நாலு வீரர்களும் உயர்ந்த சாதிக் குதிரைகள் மீதேறி வடதிசை நோக்கிப் புறப்பட்டார்கள்.

இவர்களைப் பின் தொடர்ந்து பூங்குழலி ஏறியிருந்த யானை, ஜாம் ஜாம் என்று கம்பீரமாக நடந்து வந்தது. பூங்குழலியைத் தவிர அதன் மீது யானைப் பாகன் ஒருவன் மட்டுமே ஏறிக் கொண்டிருந்தான்.

கொஞ்ச தூரம் இராஜபாட்டை வழியாக அவர்கள் சென்றார்கள். ஆனால் இராஜபாட்டையில் பிரயாணம் செய்வது சுலபமாக இல்லை. வழியெங்கும் ஜனக்கூட்டமாயிருந்தது. இளவரசர் அவ்வழியில் வருகிறார் என்பதும் எப்படியோ ஜனங்களுக்குத் தெரிந்துபோயிருந்தது. இலங்கைத் தீவின் வடபகுதியில் அப்போதெல்லாம் தமிழர்களே அதிகமாக வசித்து வந்தார்கள். அங்கங்கே ஜனங்கள் கும்பல் கும்பலாக நின்று "இளவரசர் அருள்மொழி வர்மர் வாழ்க!" "சேனாதிபதி கொடும்பாளூர் வேளார் வாழ்க!" என்று கோஷித்தார்கள். சில இடங்களில் ஜனங்கள் குதிரைகளைச் சூழ்ந்து கொண்டு பின் தொடர்ந்து வந்தார்கள். வரவரப் பின் தொடர்ந்து வரும் கூட்டம் அதிகமாகிக் கொண்டு வந்தது. குதிரைகள் வேகமாகப் போக முடியவில்லை.

இளவரசர் சேனாதிபதியுடன் இதைப் பற்றி விவாதித்ததின் பேரில் இராஜபாட்டையிலிருந்து விலகிக் காட்டு வழியில் போவதென்று தீர்மானமாயிற்று. ஜனங்களை மெதுவாகக் கழித்துக் கட்டி விட்டு அவர்கள் காட்டு வழியில் பிரவேசித்தார்கள். காட்டு வழியில் இயற்கை இடையூறுகள் காரணமாக வேகமாகப் போக முடியவில்லை. கொஞ்ச தூரம் போனதும் தாமரைத் தடாகம் ஒன்று தென்பட்டது. அதன் கரைக்கு வந்ததும் எதிர்க் கரையில் ஒரு பெரிய ஜனக் கும்பல் நிற்பது தெரிந்தது. இவர்களைப் பார்த்தவுடனே அந்த ஜனக் கும்பலின் மத்தியிலிருந்து தாரை, தப்பட்டை, கொம்பு, பேரிகை முதலிய வாத்தியங்களின் பெரு முழக்கம் கிளம்பிற்று.

"கொஞ்சம் இருங்கள்; நான் போய் அவர்கள் யார் என்று பார்த்து விட்டு வருகிறேன்!" என்று கூறி விட்டுச் சேனாதிபதி குதிரையைத் தட்டி விட்டுக் கொண்டு முன்னதாகச் சென்றார். சிறிது நேரத்துக்கெல்லாம் திரும்பி வந்து "இளவரசர் இந்த வழி வருவது எப்படியோ பக்கத்துக் கிராம வாசிகளுக்குத் தெரிந்து போயிருக்கிறது. இளவரசருக்கு மரியாதை செய்யத்தான் அவர்கள் வந்திருக்கிறார்கள்!" என்றார்.

ஜனங்கள் நெருங்கி வந்தார்கள். இளவரசரைச் சுற்றிச் சுற்றி வந்து அடங்காத ஆர்வத்துடன் பார்த்தார்கள். பலவகை ஜயகோஷங்களையும் வாழ்த்தொலிகளையும் கிளப்பினார்கள். அவற்றில் "ஈழத்தரசர் அருள்மொழி வர்மர் வாழ்க!" என்ற கோஷம் மட்டும் பிரதானமாயிருந்தது.

இளவரசர் முகத்தில் புன்னகை மலர்ந்தது. அந்த ஜனக் கூட்டத்திற்குத் தலைவன் என்று தோன்றிய ஒருவனை அருகில் அழைத்தார். "இவர்கள் எதற்காக எனக்கு ஈழத்து அரசுப் பட்டம் சூட்டுகிறார்கள்?" என்று கேட்டார். அவன் மிகப் பணிவுடன் "அரசே! பன்னெடுங் காலமாக இந்த ஈழநாடு நிலையான அரசு இல்லாமல் அவதிப்பட்டு வருகிறது. பொன்னியின் செல்வர் ஈழ நாட்டின் மன்னர் ஆக வேண்டும் என்பது எங்கள் கோரிக்கை. இந்நாட்டில் வாழும் எல்லா ஜனங்களுடைய விருப்பமும் அதுதான். தமிழர்கள், சிங்களவர்கள், சைவர்கள், பௌத்தர்கள், துறவிகள், இல்லறத்தார்

எல்லாரும் அதையே விரும்புகிறார்கள்'' என்று கூறினான்.

இளவரசருக்கும் அவரைச் சேர்ந்தவர்களுக்கும் விருந்து அளிக்க அவர்கள் ஏற்பாடு செய்திருந்தார்கள். விருந்தை ஏற்றுக் கொள்ளாமல் போக முடியவில்லை. விருந்துண்ட பிறகு விடைபெற்றுப் புறப்படுவதற்கு வெகு நேரமாகி விட்டது.

இளவரசருக்கு உபசாரங்கள் நடந்து கொண்டிருந்த சமயத்தில் வந்தியத்தேவனும் ஆழ்வார்க்கடியானும் தனித்துப் பேசிக் கொள்ளச் சந்தர்ப்பம் கிடைத்தது.

"தம்பி! பார்த்தாயா? இதெல்லாம் சேனாதிபதியின் சூழ்ச்சி என்று தெரியவில்லையா? முன்னாலேயே அவசரமாகச் செய்தி அனுப்பி இந்த உபசாரங்களையெல்லாம் ஏற்பாடு செய்திருக்கிறார்!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

"சேனாதிபதியின் ஏற்பாடுதான் என்று ஒருவாறு தெரிகிறது. ஆனால் இந்தச் சூழ்ச்சியின் நோக்கம் என்னவென்று தெரியவில்லையே? இப்படியெல்லாம் இந்தத் தீவில் வாழும் ஜனங்கள் சொல்வதைக் கேட்டு இளவரசர் நேற்று வேண்டாம் என்று மறுத்த சிம்மாசனத்தின் பேரில் இன்றைக்கு ஆசை கொண்டு விடுவார் என்ற எண்ணமா?'' என்று வந்தியத்தேவன் கேட்டான்.

"அது ஒரு நோக்கமாயிருக்கலாம். அதைக் காட்டிலும் முக்கியமானது நம் பிரயாணத்தைத் தாமதப் படுத்துவதுதான்!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

"பிரயாணத்தைத் தாமதப்படுத்துவதினால் சேனாதிபதி என்ன பலனை எதிர்பார்க்கிறார்?''

"அது எனக்கும் தெரியவில்லை; ஆனால் சீக்கிரத்தில் தெரிந்துதானே ஆக வேண்டும்? இளவரசருடைய முகத்தைப்பார்! அவருக்கு இவையெல்லாம் பிடிக்கவில்லையென்று தெரிகிறதல்லவா?''

வந்தியத்தேவன் இளவரசரின் முகத்தைப் பார்த்தான். ஆத்திரமான வார்த்தைகளைப் பேசும்போதுகூட மலர்ந்து விளங்கிய அவருடைய முகத்தில் இப்போது எள்ளும் கொள்ளும் வெடித்தன. புருவங்கள் நெறித்திருந்தன. கண்கள் ஆழ்ந்த சிந்தனையைக் காட்டின.

அதே சமயத்தில் பூங்குழலி அத்தாமரைக் குளத்தின் இன்னொரு கரையில் தன்னந் தனியாக உட்கார்ந்து சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள். எதிர் பாராதபடி அவளுக்கு இந்தப் பிரயாணம் உற்சாகம் தருவதாக இல்லை.

பிரயாணத்தின்போது இளவரசருடன் தனித்திருக்கும் சந்தர்ப்பம் கிடைக்குமென்று நினைத்தாள். அவர் தன்னுடனே அளவளாவிப் பேசுவார் என்று எண்ணினாள். தன் மனதில் பொங்கும் உணர்ச்சியில் ஒரு சிறிதேனும் வெளியிடலாம் என்று ஆசைப்பட்டாள். அதற்கெல்லாம் சமயமே கிட்டாது போலிருக்கிறது. இளவரசரைச் சுற்றி ஒரே கூட்டமாகவே இருக்கிறது.

அவரை எதிரிகளிடம் கொண்டு போய் ஒப்புவித்த பழி ஒன்றுதான் மிஞ்சும் போலும். அந்தப் பழி தனக்கு எதற்காக ஏற்பட வேண்டும்? ஏன் இங்கிருந்தபடி ஒருவருக்கும் தெரியாமல் ஓடிவிடக் கூடாது? சேனாதிபதியின் கோபத்திலிருந்தாவது தப்பியபடி ஆகும்!

சே! சேனாதிபதியின் கோபம் என்னை என்ன செய்து விடும்? யாருடைய கோபந்தான் என்ன செய்து விடும்? அதற்கெல்லாம் நான் பயப்படவில்லை. ஆனால் என்னுடைய எண்ணமெல்லாம் ஏன் மண்ணோடு மண்ணாக வேண்டும்? இந்த நெஞ்சில் உள்ள தீ எத்தனை நாள் இப்படி என்னைத் தகித்துக் கொண்டிருக்கும்?—இந்த உடம்பில் உயிர் எதற்காக இருக்கிறது? திடீரென்று ஒரு இடி விழுந்து என்னைக் கொன்று விடக்கூடாதா? — இப்படி எத்தனையோ ஆயிரம் தடவை ஆசைப் பட்டாகி விட்டது. பயன் ஒன்றுமில்லை. இந்த உயிர் தானாகப் போகப் போவதில்லை. நானாக ஏதேனும் செய்து கொண்டால்தான் இந்த உயிர் போகும்!......

ஆ! இது என்ன? கனவு காண்கிறேனா? இல்லை, கனவு இல்லை! அங்கே அந்தப் பாழும் மண்டபத்துக்குப் பக்கத்தில் இளவரசருடைய சிநேகிதர் என்னிடமிருந்து பிடுங்கி எறிந்த கத்தி இதோ வந்து என்னருகில் விழுந்திருக்கிறதே? இதை யார் எறிந்திருப்பார்கள்? யாரோ அவருடைய பகைவர்கள்தான் எறிந்திருப்பார்கள்! என்னைக் கொல்லுவதற்குத்தான் எறிந்திருப்பார்கள்! என்ன துரதிர்ஷ்டம்! என் மேலே விழாமல் சற்று நகர்ந்து விழுந்து விட்டதே!—இதுவும் நல்லதற்குத்தான். கையில் இந்தக் கத்தி இருக்கட்டும். அவருக்கு நான் கொடுத்த வாக்கை நிறைவேற்றிய பிறகு, அவரை அந்தப் பாதகர்களிடம் கொண்டு போய் ஒப்புவித்த பிறகு, அவர் எதிரிலேயே இந்தக் கத்தி

யினால் குத்திக் கொண்டு இறந்து விடுகிறேன். சீச்சீ! எதற்காக அவர் மனதை அப்படிப் புண்படுத்த வேண்டும்? அவர் கப்பலில் ஏறிப் போன பிறகு, படகில் ஏறி நடுக்கடலில் சென்று அங்கே குத்திக் கொண்டு சாகலாம். என் அருமைக் கத்தியே! நீ திரும்பி வந்தாயல்லவா? உன்னை அனுப்பியவர்களுக்கு வந்தனம்.

ஒரு வேளை இளவரசர் மேலே எறிய எண்ணி இதை எறிந்திருப்பார்களோ? ஆம்; அவருக்கு வழியில் எத்தனையோ அபாயங்கள் நேரலாம் என்று சேநாதிபதிகூடச் சொன்னாரே?......அப்படி ஒரு சந்தர்ப்பம் எனக்குக் கிடைக்கக்கூடாதா? அவர் பேரில் குறி பார்த்து எறிந்த கத்தி என் நெஞ்சில் விழக் கூடாதா? அப்படி விழுந்து அவருக்காக நான் உயிர் துறக்கும்படி நேரக்கூடாதா? அவ்விதம் நேர்ந்தால், நான் இரத்தம் பெருக்கி உயிர் துறக்கும் சமயத்தில்!......

பூங்குழலியின் மனதில் ஒரு விசித்திரமான தோற்றம் ஏற்பட்டது. அவளுடைய மார்பில் கத்தி பாய்ந்திருந்தது. அதிலிருந்து இரத்தம் கொட்டிக் கொண்டிருந்தது. இளவரசர் ஓடி வந்தார். "ஐயோ! எனக்காக உயிர் துறக்கிறாயா?" என்று கேட்டார். பூங்குழலியின் உள்ளம் பூரித்து நெஞ்சிலிருந்து இரத்தம் அதிகமாகப் பீறிட்டு வந்தது. இளவரசர் அவளை வாரி எடுத்துத் தம் மடியில் போட்டுக் கொண்டார். அவளுடைய நெஞ்சிலிருந்து பெருகிய இரத்தம் அவர் உடம்பையும் உடைகளையும் நனைத்தது. பூங்குழலி கலகலவென்று சிரித்தாள். "இளவரசே! இப்போதாவது என் நெஞ்சில் உள்ளது என்னவென்று தெரிந்து கொண்டீர்களா?" என்று கேட்டாள். "அடி பாவி! அது எனக்கு முன்னமே தெரியுமே? இதற்காகவா உயிரை விடுகிறாய்?" என்று இளவரசர் அலறினார். பூங்குழலிக்கு ஆனந்தம் தாங்கவில்லை. உரத்த சத்தம் போட்டுச் சிரித்தாள்!......

"ஏ பைத்தியமே!" என்ற குரலைக் கேட்டுப் பூங்குழலி நிமிர்ந்து பார்த்தாள். எதிரில் வந்தியத்தேவன் நின்று கொண்டிருந்தான்.

"இளவரசர் ஏற்கெனவே கோபமாயிருக்கிறார்; பிரயாணம் தாமதப்படுகிறது என்று. உன்னால் வேறு தாமதம் வேண்டாம். சீக்கிரம் எழுந்து வா!" என்றான் வந்தியத்தேவன்.

பூங்குழலி சிரித்துக்கொண்டு எழுந்து ஓடிப் போய் யானையின் மீது ஏறிக் கொண்டாள். கத்தியை நெஞ்சுடன் அணைத்துக் கொண்டு கொஞ்சினாள்.

*       *       *

காட்டு வழியில் மேலும் கொஞ்ச தூரம் சென்ற பிறகு எதிர்பாராத ஒரு சம்பவம் நிகழ்ந்தது. பிரயாணிகளின் வலது பக்கமிருந்த அடர்ந்த காட்டிலிருந்து 'விர்' என்ற சத்தத்துடன் ஓர் அம்பு பாய்ந்து வந்தது. இளவரசரைக் குறி பார்த்து அது எய்யப்பட்டிருக்க வேண்டும் என்பதில் ஐயமில்லை. ஆனால் அந்த அம்பைவிட வேகமாக இளவரசர் குதிரையின் தலைக் கயிற்றை இழுத்துத் திருப்பினார். அம்பு அவருக்கு வெகு சமீபமாகச் சென்று அவருக்கு அப்பால் வந்து கொண்டிருந்த ஆழ்வார்க்கடியானுடைய தலைப்பாகையில் பாய்ந்து அதைக் கொத்திக் கொண்டு சென்றது.

ஆழ்வார்க்கடியான் தலையைத் தடவிக் கொண்டு வியப்புடன் பார்த்தான்.

சேநாதிபதி பூதிவிக்கிரம கேசரி திடுக்கிட்டுப் போய் விட்டார்.

எல்லாருமே திகைத்து நின்றார்கள்.

பூங்குழலியோ அந்த அம்பு தன் பேரில் விழுந்து தன்னைக் கொன்றுவிடவில்லையே என்று வருத்தப் பட்டாள்.

சிறிது திகைப்பு நீங்கிய பிறகு சேநாதிபதி "இளவரசே! பார்த்தீர்களா? தங்களைப் பாதுகாப்பின்றித் தனியே அனுப்பியிருந்தால் எவ்வளவு பிசகான காரியமாயிருக்கும்?" என்று சொல்லிவிட்டுக் காவலுக்கு வந்த வீரர்களைக் காட்டுக்குள் புகுந்து தேடச் சொன்னார். அவர்கள் சிறிது நேரம் தேடிவிட்டுத் திரும்பி வந்து "யாரும் அகப்படவில்லை" என்றார்கள்.

சேநாதிபதி மேலே பிரயாணத்தைப் பற்றி ஏற்பாடு செய்யத் தொடங்கினார். "இளவரசரை நடுவில் நிறுத்தி நாம் நாலு புறமும் சூழ்ந்து வரவேண்டும்" என்று கூறி, வியூகம் வகுக்க ஆரம்பித்தார்.

அப்போது இளவரசர், "சேநாதிபதி! ஒரு வேண்டுகோள்!" என்றார்.

"இது என்ன வார்த்தை? கட்டளையிடுங்கள்!" என்றார் சேநாதிபதி.

"நான் உயிரோடு தஞ்சை செல்ல விரும்புகிறேன். நான் குற்றமற்றவன் என்பதை என் தந்தையிடம் மெய்ப்பிக்க விரும்புகிறேன்......"

"தங்கள் தந்தை தங்களை ஒரு நாளும் சந்தேகிக்க மாட்டார், இளவரசே!"

"தந்தை மட்டுமல்ல; மக்கள் எல்லாரும் ஒப்புக் கொள்ளும்படி நிரூபிக்க

விரும்புகிறேன். அந்தக் காரியத்தை நிறைவேற்றிய பிறகு என் உயிரைப் பற்றிச் சிறிதும் கவலைப்பட மாட்டேன். அதற்கு முன்னால் வழியிலேயே உயிர் துறக்க விரும்ப வில்லை.''

''ஐயா! தங்கள் உயிருக்கு ஆபத்து வருவதா யிருந்தால் அந்த க்ஷணமே இந்தக் கொடும்பாவி வாளை என் நெஞ்சிலே செலுத்திக் கொள்வேன்.''

''அதில் ஒன்றும் பயனில்லை. சோழ நாடு மகத்தான நஷ்டம் அடையும்.''

''தங்களை இழப்பதைக் காட்டிலும் பெரிய நஷ்டம் சோழ நாட்டுக்கு வேறு என்ன இருக்க முடியும்? தங்களுக்கு ஆபத்து வருவதற்குக் காரணமாயிருந்து விட்டு அப்புறம் இந்தக் கொடும்பாவி ஒரு கணமும் உயிரை வைத்துக் கொண்டிருப்பேனா?''

''அப்படியானால் என் உயிரை நான் காப்பாற்றிக் கொள்ளுவது இன்னும் முக்கியமாகிறது.''

''அதைக் காட்டிலும் முக்கியமானது இந்த உலகத்தில் வேறு எதுவும் இல்லை.''

''அதற்கு எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது.''

''சொல்லுங்கள், ஐயா!''

''குதிரை மேல் பிரயாணம் செய்யும் வரையில் சற்று முன் வந்த அம்பைப் போல் வேறு அபாயங்கள் ஏற்பட்டுக் கொண்டுதா னிருக்கும்.''

''நடந்து போகலாம் என்று சொல்லுகிறீர்களா? அல்லது......''

''எனக்கு யானைகளின் பாஷை நன்றாய்த் தெரியும்; யானைகள் நான் சொன்ன படி கேட்கும் என்று தாங்கள் அறிவீர்கள் அல்லவா?''



"ஆம், ஐயா! யானைப் பாகன் வேஷம் பூண்டு இந்த இலங்கைத் தீவில் பெரும் பகுதியைத் தாங்கள் சுற்றிப் பார்த்திருப்பதும் எனக்குத் தெரியும்."

"ஆகவே நான் சொல்கிறது என்னவென்றால், மறுபடியும் சிறிது நேரம் நான் யானைப் பாகன் ஆகிறேன். இப்போது யானையை நடத்துகிறவன் கொஞ்சதூரம் என் குதிரை மேல் ஏறிக் கொண்டு வரட்டும்."

இதைக் கேட்ட சேநாதிபதி சிறிது மனத் தடுமாற்றமடைந்ததாகத் தோன்



றியது. இளவரசருடைய யோசனைக்கு யாராவது ஆட்சேபம் சொல்ல மாட்டார்களா என்று ஆவலுடன் சுற்று முற்றும் பார்த்தார். ஆனால் எல்லாரும் கம்மென்று இருந்தார்கள்.

"ஐயா! யானைப் பாகனுக்குக் குதிரை ஏறத் தெரியுமோ, என்னமோ?"

"தெரியாவிட்டால், நடந்து திரும்பிப் போகட்டும்."

"அந்தப் பெண் பெரிய சங்கோசியாயிருக்கிறாளே? அவள் தங்களுக்குச் சரி சமமாக யானை மீது உட்கார மாட்டேன் என்று சொன்னால்......"

"கீழே குதித்து நடந்து வரட்டும்."

"தங்கள் சித்தம், இளவரசே!"

இளவரசர் உடனே குதிரை மீதிருந்து குதித்தார். யானையின் அருகில் சென்றார். பூங்குழலியின் கரிய கண்கள் ஆர்வத்தினால் நீண்டு வியப்பினால் அகன்று அவரை நோக்கின. யானைப் பாகனை இறக்கிவிட்டுத் தான் யானை மீது பாய்ந்து அதன் கழுத்தில் உட்கார்ந்துகொண்டார்.

தடைப்பட்ட பிரயாணம் மறுபடியும் ஆரம்பமாகியது.

பூங்குழலி புளகாங்கிதம் அடைந்தாள். யானையின் முதுகின் மேலிருந்து மேகங்களின் மீது பாய்ந்தாள். வான வெளியில் உலவினாள். சொர்க்கத்தை எட்டிப் பார்த்து அதன் விவரிக்க முடியாத இன்ப சுகத்தின் இயல்பு இதுவென்பதை ஒருவாறு உணர்ந்து அறிந்தாள்.

ஆகா! இதுவென்ன தேவகானமா? இவ்வளவு இன்பமாயிருக்கிறதே? இல்லை, இல்லை, தேவ கானத்துக்கு இவ்வளவு இனிமை ஏது? இளவரசர் அல்லவா பேசுகிறார்!

"சமுத்திரகுமாரி! என்னுடன் இந்த யானை மீது தனியாக இருப்பது உனக்கு அருவருப்பாயிருக்கிறதா?"

"ஏழு ஜன்மங்களில் நான் செய்த தவத்தினால் இந்தப் பாக்கியம் எனக்குக் கிட்டியிருக்கிறது, பிரபு!"

"திடீரென்று இந்த யானைக்கு மதம் பிடித்து இது ஓட ஆரம்பித்தால் நீ பயப்படுவாயா?"

"தாங்கள் பக்கத்தில் இருக்கும்போது வானம் இடிந்து விழுந்தாலும் பயப்பட மாட்டேன், ஐயா!"

"உன் படகை எங்கே விட்டு விட்டு வந்திருக்கிறாய், பூங்குழலி?"

"யானை இறவுத் துறைக்குச் சமீபத்தில், ஐயா!"

"இக்கரையிலா, அக்கரையிலா?"

"அக்கரையிலேதான் படகை நிறுத்தத் தனி இடம் கிடைத்தது. அங்கேயே படகை நிறுத்தி விட்டு வந்தேன்."

"யானை இறவுத் துறையை எப்படிக் கடந்து வந்தாய்?"

"நான் வரும்போது கடல் நீர் மிகவும் குறைவாயிருந்தது. ஆகையால் பெரும்பாலும் நடந்து வந்தேன். கொஞ்சம் நீந்தியும் வந்தேன்."

"இப்போது இந்த யானை கடலில் இறங்கிச் சென்றால் பயப்படுவாயா?"

"கடலிலே என்னைத் தள்ளி விட்டாலும் கவலையில்லை; நான்தான் சமுத்திர குமாரி ஆயிற்றே? தாங்கள்தானே பெயர் கொடுத்தீர்கள்?"

"உன் படகு இருக்குமிடம் சென்றதும் அதில் நாம் ஏறிக்கொள்வோம். நீ தான் படகு தள்ளிக் கொண்டு வர வேண்டும். இரண்டு பேரையும் வைத்துத் தள்ள முடியும் அல்லவா?"

"பத்து வயது முதல் துடுப்புப் பிடித்த கரங்கள் இவை, பிரபு! அரண்மனைப் பெண்களைப்போல் மலரினும் மிருதுவான கரங்கள் அல்ல. தங்கள் சிநேகிதர் வந்தியத் தேவரை வைத்துத் தள்ளிவந்ததைஅவர் சொல்லவில்லையா?"

"சொன்னார்! ஆனால் இன்று அதை விட வேகமாகத் தள்ள வேண்டும். தொண்டைமான் ஆற்றின் முகத்துவாரத்தில் கப்பல்கள் வந்து நிற்கும் இடத்துக்கு அதி சீக்கிரமாகப் போய்ச் சேர வேண்டும்."

"இளவரசே! அவ்வளவு கொடூரமான காரியத்தை என்னை ஏன் செய்யப் பணிக்கிறீர்கள்? தங்களைச் சிறையாகாமல் தப்புவிப்பதற்காக ஓடோடியும் வந்தேன். சிறைப் படுத்த வந்திருப்பவர்களிடம் தங்களைக் கொண்டு போய் ஒப்புவிக்கும்படி பணிக்கிறீர்கள்? இந்த ஏழையின் பேரில் ஏன் இவ்வளவு கொடூரம்?"

"பூங்குழலி! என் தந்தை—சக்கரவர்த்தி—நோய்ப்பட்டிருப்பது உனக்குத் தெரியும், அல்லவா?"

"தெரியும், ஐயா! வானத்தில் சில நாளாக வால்நட்சத்திரம் தோன்றுவது பற்றி ஜனங்கள் பேசிக்கொள்ளுவதும் எனக்குத் தெரியும்."

"எந்த நிமிஷத்திலும் என் தந்தையின் வாழ்நாள் முடிவுறக் கூடும் அல்லவா?"

பூங்குழலி மௌனமாயிருந்தாள்.

"அவர் ஒரு வேளை இவ்வுலகை நீத்துச் செல்ல நேரிட்டால், அவருக்கு எதிராக நான் சதி செய்து இராஜ்யத்தைக் கைப்பற்ற முயன்றேன் என்ற எண்ணத்துடன் அவர் போவது நல்லதா?"

"சக்கரவர்த்தி தங்களைப் பற்றி ஒரு நாளும் அப்படி நம்ப மாட்டார். இது பழுவேட்டரையர்களின் சூழ்ச்சி!"

"அப்படிப்பட்ட பழுவேட்டரையர்களுக்கும் கூட நான் குற்றமற்றவன் என்பதை நிரூபிக்க விரும்புகிறேன்..."

"எதற்காக, ஐயா?"

"உண்மையிலேயே எனக்கு இராஜ்யம் ஆளுவதில் ஆசையில்லை, பூங்குழலி!"

"வேறு எதில் தங்களுக்கு ஆசை?"

"படகில் ஏறி முடிவில்லாத கடலில் என்றென்றும் போய்க் கொண்டிருக்க வேண்டும் என்று ஆசை! கடல்களுக்கு அப்பால் இந்த ஈழ நாட்டைப் போல் எத்தனையோ நாடுகள் இருப்பதாகக் கேள்வி. அந்த நாடுகளுக்கெல்லாம் போக வேண்டும் என்று ஆசை. அந்தந்த நாட்டு மக்களைப் பார்த்துப் பேச வேண்டும் என்று ஆசை!"

"விந்தை! விந்தை!"

"எது விந்தை?"

"என் மனதில் குடிகொண்டுள்ள ஆசையே தங்கள் மனதிலும் இருப்பதைக் குறித்து ஆச்சரியப்படுகிறேன். தாங்கள் அப்படிக் கடல் பிரயாணம் தொடங்கும்போது என்னையும் அழைத்துப் போவீர்களா?"

"முதலிலே, இப்போது நான் செய்ய வேண்டிய கடமையை நிறைவேற்றுகிறேன். அதற்கு நீ உதவி செய்வாய் அல்லவா?"

"தங்கள் சித்தம்!"

"நீ உட்கார்ந்திருக்கும் பீடத்திலிருந்து இரண்டு பக்கமும் கயிறுகள் தொங்குகின்றன அல்லவா? அவற்றை எடுத்து உன்னைக் கெட்டியாகக் கட்டிக் கொள்."

"எதற்காக, இளவரசே!"

"யானை இப்போது மதங் கொண்டு ஓடப்போகிறது. ஜாக்கிரதை, பூங்குழலி!"

இவ்விதம் கூறிவிட்டு இளவரசர் யானையின் மத்தகத்தைக் கையினால் தடவிக் கொடுத்த வண்ணம் அதன் காதண்டை ஏதோ சொன்னார்.

யானையின் நடை வேகம் திடீரென்று அதிகமாயிற்று.

இளவரசர் யானையின் செவியண்டையில் குனிந்து மேலும் ஏதோ சொன்னார்.

அவ்வளவுதான்! நடை, ஓட்டமாயிற்று. துதிக்கையைத் தூக்கிக்கொண்டு ஒரு தடவை பயங்கரமான பிளிறல் சத்தம் போட்டு விட்டு ஓடத் தொடங்கியது. சூறாவளி சுழன்று அடிக்கும்போது காடுகளின் மரங்கள் படும்பாடு அந்த யானையின் வேகத்தினால் பட்டன. சடசடவென்று மரங்களும் மரக்கிளைகளும் சரிந்து விழுந்தன. பூமி அதிர்ந்தது. எட்டுத் திக்குகளும் நடு நடுங்கின. மரங்களின் மீதிருந்த பறவை இனங்கள் சிறகுகளைச் சடசட வென்று அடித்துக் கொண்டும் பீதி கொண்ட குரலில் கூவிக் கொண்டும் பறந்தன. காட்டில் மறைந்து வாழ்ந்த மிருகங்கள் வெளிப் புறப்பட்டு நாலாபுறமும் விழுந்தடித்து ஓடின.

"ஐயையோ! யானைக்கு மதம் பிடித்து விட்டது போலிருக்கிறதே! இது என்ன விபரீதம்!" என்று சேநாதிபதி பூதி விக்கிரம கேசரி கூவினார்.

இவ்வளவு தூரம் இளவரசர் சொல்லியிருந்தும் பூங்குழலியின் உள்ளமும் திகில் அடைந்தது. அவள் முகத்தில் பயப் பிராந்தியின் அறிகுறி தோன்றியது.

பூங்குழலி ஒரு பெரிய பயங்கரமான பிர்மாண்டமான கடல் சுழலில் அகப்பட்டுக் கொண்டாள். அதே சுழலில் அகப்பட்டுக் கொண்டு இளவரசரும் சுற்றிச் சுற்றி வந்தார். யானையும் அப்படியே சுழன்று சுழன்று வந்தது.

பூங்குழலி கண்களை இறுக மூடிக் கொண்டாள்.

புயற்காற்றினால் தள்ளப்பட்டு ஓடும் கரிய மேகத்தைப் போல் யானை போய்க் கொண்டேயிருந்தது.

கடைசியில் யானை இறவுத் துறையை அடைந்தது.

அங்கே இலங்கைத்தீவின் கீழ்ப்புறத்துக் கடலும் மேற்புறத்துக் கடலும் ஒன்றாய்ச் சேர்ந்தன. அந்த ஜலசந்தியின் மிகக் குறுகலான இடத்துக்குத்தான் யானை இறவு என்று பெயர். இலங்கைத் தீவின் வட பகுதியையும் மத்தியப் பகுதியையும் ஒன்று சேர்த்த அக் கடல் துறையில் யானை இறங்கியது. அனுமார் தூக்கி எறிந்த மலை கடலில் விழுந்தது போல விழுந்தது. (தொடரும்)


உணர்ச்சி மிகுந்த உள்ளத்தைக் கவரும் சித்திரம்...
சம்சாரம்
தமிழ்
இப்பொழுது சென்னை... பிரபாத் வெலிங்டன் இரு தியேட்டர்களிலும் மற்றும் தமிழ்நாடு கேரளமெங்கும் நடைபெறுகிறது
ஜெமினி சித்திரம்...



# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரஸ்வாமி

## 57. தியான பலன்

மனசினால் உடல் அவயவங்களுக்குச் சாந்தி ஜெபம் அளித்து, தளர்ச்சி யாக்கி, கடைசியில் மனசைப் புருவ மத்தியில் நிறுத்தித் தியானத்திலிருப்பது சாந்தி ஆசனத்தின் நான்காவது படி ஆகும். இதனால் சாதகர்களுக்கு உடல் மாத்திரம் பயனடைகிற தென்பதில்லை. மனம், ஆன்மா, எல்லாமே பயனடைகின்றன. உடலினால் மனசும், மனசினால் உடலும், இவை இரண்டினால் ஆன்மாவும் பலனடைகிறது.

மனம் அடங்குவதினால் இச்சா சக்தி, மனோ பலம் அதிகப்படுகிறது. உன்னத நோக்கங்கள், உயர் எண்ணங்கள் தான் உதிக்கும். கூட, அதை அநுஷ்டிக்க வேண்டிய மனோ திடமும் உண்டாகும். கேவலமான, அற்பமான, கீழ்த்தரமான எண்ணங்கள் உதிக்காது. அம்மாதிரி எண்ணங்களை மனசினுள் நுழையவும் விடாது. மனிதனின் லக்ஷியப்பாதை திறந்தாய் விட்டது. இனி அதில் முன்னேறுவது அவன் கடமை. கேவலமான நரகக் குழிப்பாதைகளின் கதவு அடைக்கப்பட்டு விட்டது. இனி நிம்மதியாக வாழ்க்கையெனும் பாதையில் நடக்கலாம். கவலை, துன்பம் கஷ்டங்கள், ஏன்! நோய்கள் கூட அவனை அசைக்காது.

சாந்தி ஆசனத்தில் மனசை வசப்படுத்தினவனுக்குத் தன் நோய் மாத்திரமல்ல, மற்றவர்களின் நோய்களையும் போக்கும் சக்தி ஏற்படுகிறது. மனசை, மற்றவரின் நோயுள்ள பாகங்களில் செலுத்தி நோய் போக வேண்டுமென்று ஆணையிட்டால், அது பயந்து விலகும். யோகப்படியில் முன்னேறுகிறவனிடம் சக்திக் கனல் நிரம்பியிருக்கும். அவனே மின்சார மனிதன் என்றும் தகும். நோயாளிகளைத் தொட்ட மாத்திரத்தில் குணப்படுத்துவது, நினைத்தமாத்திரம் குணப்படுத்துவது எல்லாம் இன்னும் மேற்பட்ட நிலைகள். அவை மற்றப்படிகளாகிய பிரத்யாகார தாரணை. தியான சமாதிகளில் கிடைக்கும். இந்தச் சாந்தி ஆசனத்தில் அதில் ஒரு சிறிது மட்டும் சித்திக்கிறது. இவைகளைச் சில சோதனைகளால் தெரிந்து கொள்ளலாம்.

சாந்தி ஆசனத்தில் இருந்து தனக்கிருக்கும் நோய் கஷ்டங்கள், கவலையைத் தீர ஜபிப்பது "தன் மொழித் துதி" ஆகும். பிறருக்கு ஏற்படும் சுளுக்குகள், சாதாரண வலிகள், நோய்கள் முதலியன. "துதி சிகிச்சை"யினால் நாம் அளிக்கலாம். பாதிக்கப்பட்டவர்களின் உடலில், பாதிக்கப்பட்ட இடத்தில் மனதைச் செலுத்தி ஐந்து அல்லது பத்து நிமிஷம் வரை அவைகளை விலக ஆக்ஞையிட்டால் விலகும்.

தேள் கடியின் விஷத்தை இம்மாதிரி இறக்கி விடலாம். இவைகள் எல்லாம் 'பரீட்சார்த்தமாக ஓரிரு தடவை செய்து பார்க்கலாம். அதே தொழிலாகக் கொள்ளக் கூடாது. நமது சக்தி குறையும். பாட்டெரியிலிருந்து கரண்டை உபயோகிக்க உபயோகிக்கக் குறையத்தானே செய்யும்! முக்கிய அவசர, அத்தியாவசியமான காரியங்களுக்கு வேண்டுமானால் உபயோகிக்கலாம். நாம் செலவிடும் பல காரியங்களுக்கு அவை அவசியம். மேலும் முன்னேறவும் அவை அவசியமாகும்.

சாந்தி ஆசனத்தை ஆசனம் செய்து முடித்த பின் தான் செய்ய வேண்டு மென்பதில்லை. ஆசனங்களைப் பழகாதவர்களும் செய்யலாம். ஆனால் ஆசனத்தினால் இதன் பலன் பூர்த்தி ஆகும். மிக மிக பலவீனமானவர்கள், அதிக வயதானவர்கள், படுக்கையில் கிடக்கும் நோயாளிகளெல்லாம் ஆசனங்களைப் பழகாத வேளைகளில் கூடப் பன்முறை சாந்தி ஆசனம் செய்யலாம்! தன் மொழித் துதியால் தன் குறையை நீக்கிக் கொள்ளலாம். அதிக வேலையினால் சோர்வடையும்போது ஒரு பத்து நிமிஷம் சாந்தி ஆசனம் செய்தால், களைப்பு பூராவும் நீங்கிப் புது உற்சாகம் பிறக்கும். அதிக தூரம் நடக்கும்போது, ஆயாசம் ஏற்பட்டால் சாந்தி ஆசனம் செய்து கொள்ளலாம். அப்பொழுது இன்னும் பத்து மைல் நடக்கலாம்போல் தோன்றும். பல தொல்லைகளினாலும், கவலைகளினாலும், இரவில் நித்திரை வராதவர்களும் சாந்தி ஆசனம் செய்யலாம். சாந்தி ஆசனத்தில் உடலைத் தளரவிட்டு, "கவலையே! விலகு! ஓடு! என்னிடம் வராதே; நான் தூங்க வேண்டும்; தூக்கம் வருகிறது!" என்று பன்முறை மனதால் சொல்லிக் கொண்டிருந்தால் ஐந்து அல்லது பத்து நிமிஷத்தில் நல்ல தூக்கம் வந்துவிடும். இவ்வாறு எல்லோரும் இதனால் நன்மை அடையலாம். அவரவர்களின் குறை தீர சாந்தி ஆசனத்தில் தன் மொழித் துதியில் அவரவர்களுக்கு வேண்டியபடி வார்த்தைகள் அமைத்துக் கொள்ள வேண்டியதே.

சிலருக்கு என்ன நோய் என்று கண்டு பிடிக்கவே முடியாது. பலவித மருந்துகள் அருந்துவர். எந்த டாக்டரிடம் காண்பித்தாலும் உடம்புக்கு ஒன்றுமில்லை என்று சொல்லிவிட்டு ஏதாவது பெயருக்கு மருந்தளிப்பார். எதிலும் குணமாகாது. நோயாளியைப் போலத்தான் இருப்பர். சரியாகப் பசிக்காது, ஜீரணமாகாது, நல்ல ரத்த மிருக்காது. பலவீனமாய் இருப்பர், இளைப்பர், எதிலும் வெறுப்பாயிருப்பர். இப்பேர்ப்பட்டவர்களுக்கும் இந்த சாந்தி ஆசனத்தில் குணமுண்டு.

சிலர் சொல்லுவதைக் கேட்டிருக்கலாம். "அந்த ஆளுக் கென்ன! உடலைப் பற்றிய நோயாய் இருந்தால்தானே, மருந்து குணம் செய்ய! மனதைப் பற்றிய நோயை எந்த வைத்தியம் தீர்க்க முடியும்!" என்பர். அது முற்றிலும் உண்மை. ஆனால் சாந்தி ஆசனத்தினால் மாற்ற முடியும்.

மற்ற ஆசனங்கள் உடலைச் சரிப்படுத்துகிறது. சாந்தி ஆசனம் மனதைச் சரிப்படுத்துகிறது. அவை என்ன கவலையாய் இருந்தாலும் சரி, சாந்தி ஆசனத்தில் மனம் ஓய்வடைந்து புத்தி தெளிய ஆரம்பிக்கிறது. பிறகு இத்தனை நாள் நாம் கவலைப்பட்டது வீண் என்ற முடிவுக்கு வருகிறார்கள். அக் கவலையைப் போக்க வழியும் அவர்களுக்கு உடல் உறுதி பெற்றவுடன் உண்டாகி விடுகிறது. இதை எந்த மருந்தும் செய்யாது. மனோசக்தி படைத்தவர்கள் மிக சாதுர்யமாய் இவர்களின் குறை அறிந்து, தனது சக்தியைச் சிறிது அளித்து இவர்களின் மனோ வியாதியை விலக்கலாம். அமெரிக்காவில் பாரிஸில் இம்மாதிரி சிகிச்சைகள் பல நடக்கின்றன. நம் பாரத தேசத்திற்கு இவை மிகப் பழமையானது.

மனசை அனுசரித்து உடலும், உடலை அனுசரித்து மனசும் அமையும் என்பது உண்மையாயினும், உடலை அனுசரித்து மனது அமைகிறது என்பதுதான் தகும். அதனால்தான் பாரதியாரும், "விசையுறு பந்தினைப் போல் மனம் வேண்டியபடி செலும் உடல் கேட்டேன்" என்றார். மனம் நினைக்கிறது பத்து கோட்டைகள் கட்ட; ஆனால் உடலால் ஒரு கல்லையும் நகர்த்துவதற்கு முடியவில்லை யென்றால் என்ன பிரயோஜனம்! பொத்தல் வாளியில் தண்ணீர் நிரப்புவதாகும், மனசால் மட்டும் நினைப்பது. மற்ற ஆசனங்களினால் உடல் உறுதி பெற பொத்தல்கள் அடைய சாந்தி ஆசனத்தினால், அதன் துணையுடன் மனம் திடம் பெற்று நிறைகிறது.

சாதகர்கள் அவரவர்கள் நிலைமைக்கு, இஷ்டத்திற்குத் தக்கபடி சாந்தி ஆசனத்தைப் பத்து நிமிஷம் முதல் அரை மணி நேரம் கூடச் செய்யலாம். ஆனால் தூங்கிவிடக் கூடாது. அப்படித் தூக்கம் வந்தாலும் கெடுதல் ஒன்றுமில்லை. பலன் தான் குறையும். பலனடைய வேண்டுமானால் விழிப்பு நிலையி லிருக்க வேண்டும்.

சாந்தி ஆசனம் வேண்டியவரை செய்து முடித்த பின் உடனே சடக்கென்று எழுந்துவிடக் கூடாது. முதலில் எழுந்திருக்க வேண்டும் என்று நினைக்க வேண்டும். பிறகு தலை, கை, கால்கள் அசைந்து கொள்ள வேண்டும். உடலைப் பக்கங்களில் திருப்பிக் கொள்ள வேண்டும். பிறகு எழுந்து உட்காரலாம். உடனே சட்டென்று எழுந்திருந்தால், எங்கேயாவது சுளுக்கிக் கொள்ளும்.



"ஜெயிலில் வேலை செய்வது எவ்வளவோ தேவலை!"
"ஏன் அப்படிச் சொல்கிறாய்?"
"சரியாக வேலை செய்யாவிட்டால் வெளியே போகச் சொல்லவே மாட்டார்கள்."

திறமை மிக்க வேலைப்பாடு
வெகு நாள் மறையாது
திகழ்கிறது



காசி கோயில்
கி.மு. 500ல் கட்டப்பட்டது.

# Stanes

**'ஸ்டேன்ஸ்'**
**சிகப்பு லேபில்**
**சுத்தமான காப்பி**




**தி யுனைடெட்**
**காப்பி ஸப்ளை**
**கம்பெனி**
**லிமிடெட்**

கோயம்புத்தூர்,
தென் இந்தியா

பெங்களூருக்கு ஏஜண்டுகள்:
ஸ்டேன்ஸ் காபி & டீ டெப்போ
28, செண்ட் ஜான்ஸ் ரோடு
பெங்களூர் கண்டோன்மெண்ட்

கம்மாமெத்துக்கு ஏஜண்டுகள்:
ராதாகிருஷ்ண ஜெனரல் ஸ்டோர்ஸ்
கஸபா ரோடு, கம்மாமெத்




(சென்ற வாரத் தொடர்ச்சி)

சுக்ல பக்ஷத்துச் சந்திரன் பூரணமாகப் பிரகாசித்துக் கொண்டிருந்தான். சாமிக்கண்ணு நகரில் ஒவ்வொரு தெருவாகச் சுற்றிக் கொண்டு கடைசியில் அரசங்காட்டுப் பக்கம் வந்தான்.

அப்பொழுது இரவு மணி பன்னிரண்டு இருக்கும். எங்கிருந்தோ ஒரு ஆந்தை குரல் கொடுத்தது. இன்னொரு ஆந்தை அதற்குப் பதில் குரல் கொடுத்தது. பட்டப் பகல் போலத்தான் நிர்மலமான சந்திரனின் ஒளி ஒவ்வொரு பொருளையும் தெளிவாக எடுத்துக் காட்டியது. எங்கும் அமைதியும் நிசப்தமும் சூழ்ந்திருந்தது. சந்திரனின் களங்கமற்ற ஒளியில் மரங்களின் பசுமை பளபளத்தது. அந்தச் சமயம் அவனுக்குக் காட்டிற்குள்ளிருந்து ஏதோ காலடிச் சப்தம் கேட்பது போலிருந்தது. காட்டிற்குள் செல்லும் குறுகிய பாதையிலிருந்துதான் அந்தச் சப்தம் கேட்பதாக அவன் கண நேரத்தில் உணர்ந்து கொண்டான். அவன் அவசர அவசரமாகச் சென்று பார்த்தபொழுது காட்டிற்குள் யாரோ ஒரு மனிதன் போவது நிழலுருவமாகத் தெரிந்தது. அவன் மிகவும் ஜாக்கிரதையாகக் காட்டிற்குள் சென்று கொண்டிருந்த மனிதனைப் பின் தொடர்ந்தான். அப்பொழுது அவன் விடும் மூச்சுத்தான் அவனுக்குக் கேட்டதே தவிர வேறு எவ்விதமான சப்தமும் ஏற்படவில்லை. முன்னால் சென்ற மனிதனை நெருங்க நெருங்க அந்த மனிதன் யாரென்று அவனுக்குத் தெளிவாக விளங்கியது. சாமிக்கண்ணு அதி வேகமாக வந்து, அந்த மனிதனுக்கு முன்னால் சென்று, அவனைத் தடுத்து எதிரில் நின்றான். சந்திரனின் ஒளி தனக்கு எதிரில் நின்ற மனிதனின் முகத்தை அவனுக்குத் தெளிவாக எடுத்துக் காட்டியது.

'சின்னத்துரைத் தேவர்!' அவரைக் கண்டு சாமிக் கண்ணு ஆச்சரியப்படவில்லை. என்றேனும் ஒரு நாள் அவரை அந்த நிலையில் பிடிக்க வேண்டுமென்றுதானே அவன் நினைத்தான்! சின்னத்துரைத் தேவரும் அவன் திடீரென்று தன் எதிரில் தோன்றியதைப் பற்றிப் பயமோ வியப்போ அடைந்ததாகத் தெரியவில்லை. அவர் அவனைக் கண்டதும் தனக்குள் மெதுவாகச் சிரித்துக் கொண்டார். அதில் சிறிது அசட்டுத் தனமும் கலந்திருந்தது.

சின்னத்துரைத் தேவரின் நடத்தையைச் சாமிக்கண்ணு போன்ற உண்மையான போலீஸ்காரனால் ஒரு நாளும் மன்னிக்கக் கூடியதல்ல. சட்ட வரம்பு மீறி எந்த மனிதன் நடந்துகொண்டாலும் குற்றம் குற்றம்தானே!

அந்தச் சமயத்தில் எந்த மனிதன் தன்னைத் தடுத்து நிறுத்தியிருந்தாலும் அவனை எதிர்த்து அடித்துத் துரத்திவிட்டுத் தன் இச்சையாகத் தன் காரியங்களைக் கவனித்துக் கொண்டு போயிருக்க முடியும் சின்னத்துரைத் தேவரால். ஆனால் அவர் எதிரில் அப்பொழுது நிற்பவன் போலீஸ் சாமிக்கண்ணு வாயிற்றே! அவர் 'கலகல' வென்று ஒரு தடவை நகைத்து விட்டுச் சாமிக் கண்ணுவின் தோளில் தட்டி ''நீதானே......! நல்லதாய் போய்விட்டது. வேறு யாராவது போலீஸ்காரராய் இருக்குமோ என்று நான் நினைத்தேன். எனக்கு உன்னைத் தவிர வேறு எந்தப் போலீஸ்காரனைக் கண்டாலும் பிடிக்காது. மற்ற எல்லோரையும் நான் விரோதியாய்த்தான் நினைக்கிறேன். தவிர......நீ ரொம்ப நெருங்கிப் பழகியவன்...... தவிர ......'' என்றார்.

சாமிக்கண்ணு தன் தோள்மீது இருந்த அவருடைய கையை வேண்டா வெறுப்பாக எடுத்துத் தள்ளிவிட்டு, ''அதுதான் என்கிட்டே நடக்காது. என்னை மன்னிச்சுக்கிங்க! எனக்கு என்ன நேர்ந்தாலும் பாதகமில்லை. என் கடமையை நான்

செய்யத்தான் போகிறேன். அதிருக்கட்டும்; இந்தக் காட்டுக்குள்ளே இந்த நேரத்தில் நீங்க எதற்காக நுழைஞ்சீங்க......!'' என்றான்.

''எதற்காகவா!......எத்தனையோ விஷயம் இருக்கும். நாளைய தினம் எந்த மரத்தை வெட்டச் சொல்லலாம் என்று பார்த்துக் கொண்டு போக வந்தேன்...... இந்தச் சமயத்தில் நீ உன் வழியைப் பார்த்துக் கொண்டு போவதுதான் நல்லது. நாம் இரண்டு பேரும் இவ்வளவு நெருங்கிப் பழகியதற்கு......''

''நான் எப்படிப் போய்விட முடியும்! என்னுடைய கடமை கடமைதான்......'' என்றான் பிடிவாதமான குரலில் சாமிக்கண்ணு.

சின்னத்துரைத் தேவர் சிறிது நேரம் யோசித்தார். எதிர்காலத்தில் அவர்களுக்குள் ஏற்படவிருக்கும் உறவு முறைகளைப் பற்றிச் சிந்தித்தார். அவனுடைய இந்தப் பிடிவாதமான புத்தி அவளைக் கல்யாணம் செய்து கொள்ள நினைக்கும் தன் பெண்ணின் மனத்தை எவ்வளவு வருத்தமடையச் செய்யும்!

சாமிக் கண்ணுவும் இதைச் சிந்தித்தான். இப்படிப்பட்ட தர்ம சங்கடமான நிலைமை ஏற்பட்டது துரதிருஷ்டம்தான். ஆனால் அவனுடைய காதல் உணர்ச்சியைவிட அப்பொழுது அவனுடைய கடமை உணர்ச்சிதான் முன்னணியில் நின்றது. 'கடமை, கடமைதான்!' என்ற அவனுடைய அழுத்தமான குரல் மணி ஓசைபோல் அந்த நிசப்தமான வேளையில் எதிரொலி செய்தது.

சின்னத்துரைத் தேவர் ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டே, ''சாமிக்கண்ணு, உன் பிடிவாதம் ரொம்பப் பயித்தியக்காரத்தனம். நான் இந்தச் சமயத்தில் உன்னோடு போலீஸ் ஸ்டேஷனுக்கு வரத் தயார். ஆனால் இதை மாத்திரம் ஞாபகத்தில் வைத்துக் கொள். இந்த விஷயம் நம்ம உறவையே பாதித்துவிடும். அப்புறம் நீ யசோதையைக் கல்யாணம் செய்து கொள்ளலாம் என்ற எண்ணத்தைக் கனவில் கூட நினைக்க முடியாது. அவள் உன்னைப்பற்றி என்ன நினைத்துக் கொள்ளுவாள்......!'' என்றார்.

சாமிக் கண்ணு இதற்கு அஞ்சவில்லை. யசோதைக்குத் தன் மீது உள்ள காதலின் தன்மை அவனுக்குத் தெரியும். அவனுடைய நேர்மையையும் கடமை உணர்ச்சியையும் பற்றி அவள் புகழ்ந்திருப்பதை அவன் எவ்வளவோ தடவை கேட்டிருக்கிறான். அவள் தன் தகப்பனுக்காகப் பரிந்து தன் மீது கொண்டுள்ள காதலைத் துறப்பாளானால் அப்படிப்பட்ட இருதயமுள்ள பெண் தனக்கு வேண்டாம் என்பதுதான் அப்பொழுது அவனுடைய அபிப்பிராயம். கடமை என்பது எப்படிக் கடமையோ அப்படித்தான் காதல் என்பதும் காதல். ஆனால் காதலுக்காகத் தன் கடமையைப் புறக்கணித்து விட அந்தப் பிறவிப் போலீஸ்காரனால் முடியாது.

''அப்படியே இருக்கட்டும். ஆனால் அவளைப் பற்றி இந்தச் சமயத்தில் பேச இடமேயில்லை. அவள் என் மீது வைத்திருக்கும் அன்பைப் பற்றி எனக்கு நன்றாகத் தெரியும். இதற்காக என்னைத் தவறாக நினைத்தால் அவள் என்னைச் சரியாகத் தெரிந்து கொள்ளவில்லை என்றுதான் அர்த்தம். இத்தனை நாள் என்னுடன் பழகி விட்டு நான் எப்படிப் பட்டவன் என்று அவள் அறியவில்லை என்றுதான் ஆகும்'' என்றான் சாமிக்கண்ணு.

சின்னத்துரைத் தேவர் மறுபடியும் கேலியாகச் சிரித்தார். ''என் பெண் தன்னோடு ஒரு வருஷமாகப் பழகிய மனிதனுக்காகத் தன் தகப்பனை உதறி விடுவாளா? சாமிக்கண்ணு, எந்தக் காரியத்தையும் யோசித்துச் செய். பின்னால் ஏற்படக் கூடிய நன்மையெல்லாம் இதனால் கெட்டு விடும். என்னுடைய அன்பு, அவளுடைய அன்பு, என்னுடைய ஆதரவு அவளுடைய ஆதரவு எல்லாம் பாழாய்ப் போய்விடும். இந்த ஊரில் யசோதா என்னுடைய பெண் என்பதனால்தான் அவளுக்குப் பெருமை. அவள் என்னுடைய பெண் என்பதனால் அவளுக்குப் புருஷனாக வரப் போகிறவனுக்கும் பெருமை.''

சாமிக்கண்ணு சிரித்தான். ''இதையெல்லாம் யாரிடம் சொல்லுறீங்க. எனக்குத் தெரியும் உங்க பெண்ணைப் பற்றி. உங்களை அவள் எவ்வளவு பெருமையாக நினைக்கிறாளோ அதைவிடப் பல மடங்கு என்னைப் பற்றி அவளுக்குப் பெருமையும் மதிப்பும் உண்டு...'' என்றான்.

''அப்படியா...! உண்மையாய் அவள் தன் தகப்பனை அலட்சியமாகக் கருதினால் அவள் உன்னிடம் நெருங்கி ஒரு வார்த்தை பேசக்கூட இந்த சின்னத்துரைத் தேவன் விட்டு வைக்க மாட்டான்'' என்று ஆக்ரோஷமாகச் சொன்னார் சின்னத்துரைத் தேவர்.

அவர்கள் வாக்குவாதம் இப்படியே வளர்ந்து கொண்டு போகவில்லை. கடைசியில் அவர்கள் இதைச் சோதனைசெய்து பார்த்து விடுவது என்று



''போதும்! போதும்!''

நிர்மானித்தனர். இருவரும் சின்னத்துரைத் தேவர் வீட்டை நோக்கி நடந்தனர்.

★

யசோதா வீட்டு வாசலில் உட்கார்ந்திருந்தாள். அந்த நடுநிசி வேளையிலும் கண் விழித்துக் கொண்டு வீட்டு வாசலில் உட்கார்ந்திருப்பது காட்டிற்குச் சென்ற தன் தந்தையின் வரவை எதிர்நோக்கித்தான். சாமிக் கண்ணோடு தன் தகப்பன் வருவதைக் கண்டதும் அவள் எல்லாவற்றையும் பளிச்சென்று உணர்ந்து கொண்டவன் போல் பதைத்து நின்றான். அவன் பதட்டத்துடன் "இது என்ன அப்பா!" என்றான் தன் தகப்பனையும் சாமிக்கண்ணுவையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டே.

"நான் இந்த ராத்திரியில் திருட்டுத் தனமாக அரசங் காட்டுக்குள்ளே நுழைந்ததைக் கண்டு பிடித்து இந்தப் போலீஸ்காரர் என்னைக் கைது செய்கிறார்!" என்றார் அலட்சியமாகச் சிரித்துக் கொண்டே சின்னத்துரைத் தேவர்.

விளையாட்டுப் போல் சிரித்துக் கொண்டே இதைச் சின்னத்துரைத் தேவர் சொன்னாலும் யசோதை உண்மையை உணர்ந்து விட்டாள். அது எத்தகைய நெருக்கடியான கட்டம் என்பதை உணர்ந்த அவள் மனம் திகைத்தது. அவளுக்குச் சாமிக்கண்ணுவைப் பற்றி நன்கு தெரியும். அவன் தன் வேலையை எவ்வளவு கண்டிப்பாக நிறைவேற்றக் கூடியவன் என்பதும் அவளுக்கு நன்கு தெரியும். ஆனால் ஒரு நாள் இத்தகைய விபரீதம் நேரிடுமென்று அவள் நினைக்கவேயில்லை. அவள் சாமிக்கண்ணுவின் முகத்தைச் சுட்டு விடுவதுபோல் பார்த்துக் கொண்டே "இதென்ன விபரீதம்! என்னை உங்களுக்கு நன்றாகத் தெரியும். உங்களையும் எனக்கு நன்றாகத் தெரியும். இதை மனசிலே வைத்து எதையும் நீங்க செய்யணும். இவர் என் தகப்பனார். என் தகப்பனார் என்னை விட உங்களுக்கு உயர்ந்தவர். நான் அவரால் வளர்க்கப்பட்ட பெண்தானே! இது ரொம்ப வெட்கக்கேடு. நான் உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுகிறேன். இந்த விபரீதமான யோசனையை விட்டுவிடுங்க. அவரை விட்டு விடுங்க..." என்று கூறிவிட்டுக் கெஞ்சுவது போல் பச்சாத்தாபத்துடன் சாமிக்கண்ணுவைப் பார்த்தாள்.

சாமிக்கண்ணுவின் கண்களிலும் அப்பொழுது இரக்கக் குறி தோன்றியது. ஆனால் அவனுடைய இருதயம் அவளுடைய அறியாமைக்காகத்தான் அப்பொழுது இரக்கப்பட்டது. "யசோதா! நீ எதைச் செய் என்றாலும் உனக்காகச் செய்ய நான் சித்தமாய் இருக்கிறேன். ஆனால் இது மாத்திரம் முடியாது. இதைச் செய்தால்தான் நான் போலீஸ்காரன். நான் இருநூற்று அறுபத்துமூன்று! இது என் கடமை. இதை நீ என்னுடைய நிலையிலிருந்து பார்த்தால்தான் தெரியும். உன் தகப்பனாரை நான் ஸ்டேஷனுக்கு அழைத்துப் போக நேர்ந்ததற்கு வருத்தமாய்த் தானிருக்கிறது.



ஆனால் நான் இவரை இப்படியே விட்டு விட்டுப் போனால் வெட்கக் கேடு. இது என்னுடைய கடமை. அவர் என்னோடு ஸ்டேஷனுக்கு வருவதுதான் நல்லது. இத்தனை நாளும் நீ என்னைச் சரியாகத் தெரிந்து கொள்ளாவிட்டால் இனிமேலாவது தெரிந்து கொள்......" என்றான்.

யசோதா ஒன்றும் பதில் பேசவில்லை. அவள் பெருமூச்சு விட்டாள். கண நேரத்தில் அவள் கண்கள் கலங்கி நின்றதை அந்த மங்கிய நிலவொளியில் சாமிக்கண்ணு பார்த்தான். அது அவனுடைய உறுதியான உள்ளத்தை ஒன்றும் செய்து விடவில்லை. அதற்குமேல் அங்கு தாமதிப்பதும் அவனுக்குச் சரியாகப் படவில்லை. உண்மையான போலீஸ்காரன் ஒரு குற்றவாளியை எத்தகைய முறையில் அலட்சியமாகப் பார்ப்பானோ அப்படித்தான் சின்னத்துரைத் தேவரைப் பார்த்துத் தலையை அசைத்தான். அவர் ஒன்றும் பதில் பேசவில்லை. அவனைப் பின் தொடர்ந்து நடந்தார்.

இரவு முழுவதும் போலீஸ் ஸ்டேஷனிலுள்ள சிறிய கொட்டடியில் சின்னத்துரைத் தேவர் அடைத்து வைக்கப்பட்டார். மறுநாள் விடியற் காலையில் சப் இன்ஸ்பெக்டர் தண்டாயுதத்தின் முன்பாக விசாரணை ஆரம்பமாகியது. அவருடைய மேஜைக்கு ஒரு புறத்தில் சாமிக்கண்ணுவும், மறு புறத்தில் சின்னத்துரைத் தேவரும் நின்றுகொண்டிருந்தனர். சாமிக்கண்ணு மிகவும் வருத்தம் நிறைந்த குரலில் முதல் நாள் இரவு நடந்த விஷயங்களையும், சட்டப்படி அவரைக் கைது செய்ததையும் எடுத்துக் கூறினான்.

முதல் நாள் இரவில் நடந்த இவ்விஷயம் விடிவதற்குள் ஊரெங்கும் காட்டுத் தீ போல் பரவி விட்டது. பொழுது விடிந்ததும் போலீஸ் ஸ்டேஷன் வாசலில் கூட்டம் கூடிவிட்டது. சப் இன்ஸ்பெக்டர் தண்டாயுதத்தைக் கான்ஸ்டேபிள் சாமிக்கண்ணு ஒரு தர்ம சங்கடமான நிலையில் கொண்டு வந்து நிறுத்தி விட்டான். சாமிக்கண்ணுவின் முகத்தைப் பார்க்கவும் சின்னத்துரைத் தேவரின் முகத்தைப் பார்க்கவும் அவருக்கு வெட்கமாக இருந்தது. ஊரில் பெரிய பணக்காரரும், தன்னுடைய சகோதரியின் புருஷனுமாகிய ஒருவர் தன் எதிரில் விசாரணைக்காகக் கைதியாக நிறுத்தப்பட்டிருப்பது அவருக்குத் தர்ம சோதனையாகத் தானிருந்தது. அவருடைய உத்தியோகம், வாழ்க்கை இரண்டின் உயர்வும் இதிலிருந்துதான் தெளிவுபட வேண்டும். அவர் நெடு நேரம் யோசனை செய்த பிறகு சாமிக் கண்ணுவைத் தனியாக ஓரிடத்திற்கு அழைத்துக் கொண்டு போய் "சாமிக்கண்ணு! என்ன இப்படி ஒரு விபரீதமான நிலைமையை உண்டாக்கி விட்டாயே......" என்றார் சங்கடத்துடன்.

"நான் என் கடமையைச் செய்தேன். இது என் மேலே தவறு...!" என்றான் சாமிக்கண்ணு.

## சூரியோதயம்

சமீபத்தில் நான் ஒரு சித்திரக் காட்சிச் சாலைக்குப் போயிருந்தேன். அங்கே எத்தனையோ வண்ணச் சித்திரங்களை அழகாகக் காட்சிக்கு வைத்திருந்தார்கள். அவற்றுள் எல்லாம் 'சூரியோதயம்' என்று மகுடமிடப்பட்டிருந்த சித்திரம்தான் என் மனதைப் பெரிதும் கவர்ந்தது. அதையே பார்த்துக் கொண்டு நின்று விட்டேன்.

தங்களுக்குக் கொஞ்சங் கூடத் தெரியாத விஷயங்களில் சண்டப் பிரசண்டமாக ரொம்பவும் தெரிந்தவர்கள் போல் சிலர் பேசுவார்கள். அந்தக் கோஷ்டியில் என்னையும் சேர்க்க வேண்டும் போலிருக்கிறது. இல்லையென்றால் பொழுது விடிந்து எட்டு மணி ஆனாலன்றிப் படுக்கையை விட்டு எழுந்திருக்காத நான் இந்தச் சூரியோதயக் காட்சியில் ஈடுபடுவானேன்!

இந்தச் சித்திரத்தை ரஸித்துக் கொண்டிருந்த என் மனம் விரைவிலேயே வேறு விஷயங்களுக்குத் தாவியது! நானும் சூரியோதயமாவதற்கு முன் படுக்கையை விட்டு எழுந்திருந்த நாட்கள் உண்டா என்று ஞாபகப்படுத்திக் கொண்டு பார்த்தேன். உண்டு என்பது நினைவுக்கு வந்தது.

நான் பள்ளிக்கூடத்தில் படித்துக்கொண்டிருந்த நாட்களில் பரீக்ஷை நாட்கள் வரும். அந்த நாட்களில் என் படிப்பில் அக்கறை கொண்டிருந்த என் தகப்பனார், "மணி நாலாகி விட்டது. பரீக்ஷைக்கு எழுந்து படிடா!" என்று ஒரு குத்து விடுவார். "நாழியாச்சு எழுந்து படிடா! இன்னும் என்ன தூக்கம்" என்று ஒரு உதை அருள்வார். இப்படி உதை, குத்து, கும்மா இவைகளின் உதவியினால் எழுப்பப்பட்ட நான் சூரியன் நன்றாக உதித்து, சுரீர் என்ற வெய்யில் அடித்த பிறகுதான், மூளையில் சற்றும் ஏற்றுக் கொள்ளாமல் "தசரதன் ராமனுடைய பிள்ளை" என்று ஆங்கில வாக்கியத்தை நெட்டுரு போடுவதை நிறுத்தி விளக்கையும் அணைப்பேன். இந்த லக்ஷணத்தில் நான் சூரியோதயத்தைப் பார்த்தது ஏது!

பின்னால், என் சொந்த அனுபவத்துக்காக இலக்கியங்களைப் பார்க்க நேர்ந்தபோது, அதில் வரும் சூரியோதயக் காட்சிகளைப் படித்து மனம் பொருமுவேன். சில நாட்கள் இரவு படுக்கும் போது, "நாளை பஞ்ச பஞ்ச உஷத் காலத்தில் எழுந்திருந்து சூரியோதயத்தைப் பார்த்து மகிழ வேண்டும்" என்ற சங்கற்பம் செய்து கொண்டு படுத்துக் கொள்வேன். ஆனால் மறுநாள் எழுந்திருக்கும்போது கடியாரம் மணி எட்டு என்று காட்டும்!

ஆனால் இந்தச் சித்திரக்காரர் எப்படியோ சூரியோதயத்துக்கு முன் படுக்கையை விட்டு எழுந்திருந்து சூரியோதயக் காட்சியைப் பெரிதும் ரஸித்து, அற்புதமாகத் தீட்டியிருக்கிறார்; அவர் பாக்கியசாலி! என்று என் மனதுக்குள் அவரை வாழ்த்திக்கொண்டிருந்தேன்.

அதற்குள் என் பின்னால் சித்திரக் காட்சிகளைப் பார்த்துக் கொண்டே வந்தவர்களில் ஒருவர், "சூரியோதயமா! யார் சொன்னது! இது சூரியாஸ்தமனமாகத்தான் இருக்க வேண்டும்! இதை எழுதிய சித்திரக்காரரை எனக்கு நன்றாகத் தெரியும்! அவர் காலை பத்து மணிக்கு முன் படுக்கையை விட்டு எழுந்திருக்க மாட்டாரே!" என்றார்.

எனக்கு மயக்கம் வரும்போலிருந்தது. —'வேங்கு'

"தவறு இல்லே. இருந்தாலும் எதையும் யோசிக்க வேண்டும். இவர் என்னுடைய சகோதரியின் புருஷர் என்று உனக்குத் தெரியும்......அது போகட்டும். தவிர இவருடைய பெண் யசோதை உன்னைக் கல்யாணம் செய்து கொள்ள ஆசைப்படுகிறாள். நீயும் அவளைக் கல்யாணம் செய்து கொள்ள ஆசைப்படுகிறாய் என்று எனக்குத் தெரியும். அவருக்கும் உனக்குத்தான் அவளைக் கல்யாணம் செய்து கொடுக்க வேண்டும் என்று ஆசை. அப்படி யெல்லாம் இருக்கும்போது இதைக் கொஞ்சம் யோசனை தானே செய்யணும்......!" என்றார் அடக்கமான குரலில் தயவோடு.

சாமிக்கண்ணு அவரது இருதயத்தையே துருவிப் பார்ப்பவன் போல் ஒரு பார்வை பார்த்தான். "நீங்க நான் செய்தது தவறு என்கிறீங்களா. இது நம்ம கடமை. இதை நாம்தான் யோசித்துத் தெரிந்து கொள்ளவேண்டுமா! எதிராளியும் யோசிக்கலா மல்லவா! அவர் இந்த ஊரில் பெரிய மனிதர். அவருடைய மைத்துனராகிய நீங்க இந்த ஊரிலே பொறுப்பான போலீஸ் உத்தியோகத்தி லிருக்கிங்க. அவருடைய பெண் என்னைப் போல ஒரு போலீஸ்காரனைக் கல்யாணம் செய்துகொள்ள ஆசைப்படுகிறாள். அவரும் எனக்குத் தன் பெண்ணைக் கல்யாணம் செய்து வைக்க ஆசைப்படுகிறார். அப்படிப்பட்ட மனிதர் தனக்காக இல்லாவிட்டாலும் நமக்காகவாவது ஒழுங்காக நடந்து கொள்ளவேண்டாம்! இந்தக் கௌரவக் குறைவான, சட்டத்தை மதிக்காத அற்பக் காரியங்களை யெல்லாம் ஒரு பெரிய மனிதர் செய்யலாமோ......!" என்றான்.

சப் இன்ஸ்பெக்டர் ஒன்றும் பதில் பேசவில்லே. இத்தனை நாளும் அரசங்காட்டில் நுழைந்தவர்களை யெல்லாம் மன்னித்து விட்டுவிட்டார். அதைப் போலச் சின்னத்துரைத் தேவரையும் மன்னித்து விடலாம் தமக்குள்ள அதிகாரத்தினால். அப்படி அவரை விடுதலை செய்தால் ஊரில் 'இன்ஸ்பெக்டர் தம்முடைய சகோதரியின் புருஷனை நீதிக்குப் புறம்பாக விடுதலை செய்து விட்டான்' என்ற பழிச் சொல்லும் பெயரும்தானே வரும்!

இந்த வழக்கைப் பதிவு செய்து கொண்டு தொடர்ந்து விசாரணை நடத்துவதைவிட வேறு சரியான மார்க்கம் அவருக்குப் புலப்படவில்லே.

★

சின்னத் துரைத் தேவரின் வழக்கு நீதிஸ்தலத்தில் விசாரிக்கப்பட்டு, அவர் சட்ட விரோதமாக அரசங்காட்டிற்குள் நுழைந்ததாகக் குற்றம் சாட்டப்பட்டு மூன்று மாத வெறுங்காவல் தண்டனை அடைந்தார். இத்தனை நாளாகச் சாதாரண கான்ஸ்டேபிளாக இருந்த சாமிக்கண்ணுவுக்கும் அப்பொழுது ஹெட் கான்ஸ்டேபிள் வேலே கிடைத்தது. ஊரில் அவனுக்குள்ள மதிப்பு இன்னும் அதிகமாகியது.

சாமிக்கண்ணு சின்னத்துரைத் தேவரைக் கைது செய்துகொண்டு வந்த அன்று இரவு யசோதையைப் பார்த்ததுதான். அவளை மறுபடியும் பார்க்கவேயில்லே. ஆனால் அவன் மனது மாத்திரம் அவளை மறக்கவே யில்லே.

மூன்று மாதத்திற்கெல்லாம் சின்னத்துரைத் தேவர் விடுதலையானார். அவர் விடுதலை யடைந்த செய்தியைக் கேட்டதும் ஊரிலுள்ளவர்களெல்லாம் ஊரிலேயே பெரிய பணக்காரரும், பெரிய போக்கிரி என்று பெயர் எடுத்தவருமான அந்த மனிதர் பழிக்குப் பழியாகச் சாமிக்கண்ணுவை ஏதாவதொரு வகையில் வஞ்சம் தீர்த்துக் கொள்வார் என்று பேசிக்கொண்டார்கள். ஆனால் அவர் அப்படிச் செய்யவில்லே. வீட்டிற்கு வந்தவுடனேயே சாமிக்கண்ணுவுக்கும் யசோதைக்கும் கல்யாணம் செய்து வைக்க வேண்டிய ஏற்பாடுகளைத்தான் தீவிரமாகச் செய்தார்.

கல்யாணமும் வெகு விமரிசையாக நடந்தது. இது ஊரிலே எல்லோருக்கும் ஆச்சரியம்தான். சாமிக்கண்ணுவை இந்த முறையில் சின்னத்துரைத் தேவர் வஞ்சம் தீர்ப்பாரென்று அவர்கள் நினைக்கவே யில்லே. இது அவர்களுக்கு ஆச்சரியத்தை விளைவிக்காமல் என்ன செய்யும்!

இது சாமிக்கண்ணுவுக்கும் ஆச்சரியமாய்த்தானிருந்தது. அவனுக்கே புரியாத இந்த புதிர் ஒருநாள் அவன் யசோதையோடு பேசிக்கொண்டிருந்த போதுதான் புரிந்தது.

"உன் தகப்பனார் விடுதலையானவுடன் இப்படி நடக்குமென்று நான் நினைக்கவேயில்லே. இந்த ஊரில் ஒருவரும் நினைக்கவில்லே. அவர் வேறுவிதமாகத்தான் என்னை வஞ்சம் தீர்த்துக்குவாருன்னு நினைச்சாங்க!" என்றான் சாமிக்கண்ணு யசோதையிடம்.

"நான் அப்படி நினைக்கல்லே. அவரு வந்தவுடனே முதலில் நம்முடைய கல்யாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைத்தான் முதலில் செய்வார் என்று நினைத்தேன்" என்றாள் யசோதா சிரித்துக் கொண்டே.

சாமிக்கண்ணு இதைக் கேட்டதும் பரபரப்போடு அவள் முகத்தை நோக்கினான்.

"என்ன இப்படி ஆச்சரியப்பட்டுப் போயிட்டீங்களே! அன்னிக்கு ராத்திரி அவரை நீங்க கைது செய்து கொண்டு போனபோதே இந்த முடிவுக்குத்தான் நான் வந்துவிட்டேன், அவரு வைத்த பரீட்சையிலே நீங்க தேரிட்டீங்கன்னு. நீங்க கொஞ்சமாவது என் முகதாட்சண்யத்திற்காக உங்க கடமையை விட்டுக் கொடுத்துடப் போறீங்களோ என்று பயப்பட்டேன். நீங்க எனக்காக அன்று அவரை விட்டுட்டுப் போயிருந்தீங்கன்னு அப்புறம் என்னைப்பற்றி நினைக்கவே உங்களுக்கு அருகதையில்லாமல் போயிருக்கும். நல்ல வேளை. பிடிவாதத்தைத் தளர விடாமல் இருந்தீங்களே. நீங்க என்மீது வைத்திருக்கும் ஆசையில் உங்கள் கடமையை விட்டுக் கொடுத்துடுவீங்கன்னு நினைச்சாரு. ஆனால் நீங்க ஒழுங்காகவே நடந்துட்டீங்க. அவருக்கு இந்த அரசங்காட்டிலே திருட்டுத்தனமாக விறகு வெட்டிப் பிழைக்கணும்னு விதியா! ஆசையா அவருடைய மைத்துனன் இந்த ஊருக்கு சப் இன்ஸ்பெக்டராய் வந்ததிலிருந்து இந்தத் தொழிலே ஆரம்பித்தாரு. அவரு தன்னுடைய கடமையைச் சரியா செய்யுறாரா இல்லேயான்னு பார்க்க விரும்பினாரு. எங்க மாமா முகதாட்சண்யத்திற்காக இதையெல்லாம் பார்த்தும் பாராதது போல் விட்டு வைத்திருந்தாரு. ஆனால் நீங்க விடல்லே. ஒரு நாள் துணிந்து என் தகப்பனாரையே குற்றவாளியாய் அவர் மைத்துனர் எதிரிலேயே கொண்டு போய் நிறுத்தி விட்டீங்க. அவரு மூன்று மாத தண்டனை அடைந்ததற்காகக் கவலைப்படவில்லே. உங்களைப் போல அவருக்கொரு மருமகன் கிடைத்ததுதான் பெரிய சந்தோஷம்" என்று கூறி விட்டு ஆர்வத்தோடும் ஆவலோடும் அவன் முகத்தைப் பார்த்தாள் யசோதை!




## 6. அதிசயக் கல்யாணம்

அரசனுக்கும் ராணிக்கும் அரசகுமாரி அநுராதாவுக்கும் பூபதியிடம் இப்பொழுது அபார அன்பு உண்டாகி விட்டதுடன் அவனைக் கேவலம் வேலைக்காரன் என்று எண்ணாமல் ரொம்பவும் அந்தரங்க மரியாதையுடன் நடத்தினார்கள்.

இரண்டு நாள் பொறுத்து மந்திரி வைத்தியன் வீரபத்திரனை அழைத்து வந்தான். வீரபத்திரன் அரசனின் உடல் கோளாறுகளை எல்லாம் விசாரித்தான். அதற்கு அரசனும் அரண்மனை வைத்தியர் சொல்லி இருந்தபடியே ஒப்புவித்தான். அதைக் கேட்ட வீரபத்திரன் தன் மருந்து நன்கு வேலையைத் துவக்கி விட்டது என்று நினைத்துச் சந்தோஷமடைந்தான். ஆனால் அதை வெளிப்படையாய்க் காட்டிக் கொள்ளாமல் "வந்திருக்கும் நோய் ரொம்ப சாதாரணமானதுதான். நான்கு மாதம், அல்லது ஆறு மாதத்தில் பூரண சுகம் ஏற்பட்டுவிடும். இனிக் கவலையே வேண்டாம்" என்று சொல்லி ஏதோ மருந்துகளைக் கொடுத்துத் தேனிலும், பாலிலும் கலந்து கொடுக்கும்படி கூறினான்.

அதே சமயம் மறைவிலிருந்த அரண்மனை வைத்தியன் பரபரவென்று அவ்விடம் வந்து "மகாராணி, அதை இப்படிக் கொடுங்கள். பதினைந்து நிமிஷத்தில் இதைப் பரிசோதித்துக் கொண்டு வருகிறேன்" என்று வாங்கிக் கொண்டு தமது ஆராய்ச்சி அறைக்குச் சென்றான்.

அப்பொழுது வீரபத்திரனின் முகம் வெளுத்து விட்டது. எனினும் அவன் தன்னைச் சற்றுச் சமாளித்துக் கொண்டு "அரசே, இதென்ன? என்னை நம்பாத இடத்தில் நான் வைத்தியம் செய்வது எப்படிச் சாத்தியமாகும்? நான் போய் வருகிறேன்" என்று எழுந்தான்.

அப்பொழுது அவ்விடம் வந்த அரண்மனை வைத்தியன் "அரசே, இன்று வைத்தியர் வீரபத்திரன் உங்களுக்குக் கொடுத்திருக்கும் மருந்து கொடிய பாஷாணம் கலந்தது. அதைத் திடகாத்திரமான மனிதன் சாப்பிட்டால் ஒரு மாதத்தில் இறந்து போவான். பலஹீனமானவன் சாப்பிட்டால் ஒரே வாரத்தில் இறந்து விடுவான்!" என்று சொன்னான்.

உடனே அரசன் படுக்கையில் தட்டென எழுந்து உட்கார்ந்து வாயிற்படியருகில் நின்று கொண்டிருந்த தனது மெய் காவலர்களைப் பார்த்து ஏதோ ஜாடை செய்தான். உடனே இருவர் வந்து நழுவப் பார்த்த வீரபத்திரனை இறுகப் பிடித்துக் கொண்டனர்.

உடனே அரசன் "மந்திரியையும், வைத்தியனையும் இழுத்துப் போய்ச் சிறையில் போடுங்கள்!" என்று உத்தரவிட்டான்.

அரசன் கட்டிலை விட்டு நன்றாக எழுந்து நின்று கணீரென்ற குரலில் உத்தரவு இட்டதைக் கண்ட மந்திரியும், வீரபத்திரனும் "அடாடா! அரசன் திடகாத்திரமாகத் தானே இருக்கிறான்! அவன் இவ்வளவு நாட்களாக நோய் என்று படுக்கையில் சன்னசுரத்தில் பேசிப் படுத்திருந்ததெல்லாம் வெறும் பாசாங்குதானா?" என்று அப்படியே திகைத்து விட்டனர்.



பூபதிக்கு நல்ல அதிர்ஷ்டம் ஆரம்பமாகி விட்டது. இப்பொழுது அவன் அரண்மனையில் வசித்தான். அவன் ஏவிய பணிகளைச் செய்ய வேலை ஆட்கள் கைகட்டி நின்றனர். அரசனுக்கு அடுத்த




பட்டுப் பூச்சியைப் புலி முகமாக மாற்றலாம்.

படியான உபசாரம் அவனுக்கு நடைபெற்றது. ஆனால் அவனுள்ளத்தில் சதா தன் தாயாரைப் பற்றியும் காணாமற் போன புவனாவைப் பற்றியும் கவலை இருந்து கொண்டே இருந்தது.

'அம்மா அந்தக் குக்கிராமத்தில் கஷ்டப் பட்டுக் கொண்டிருக்க, நான் சுகமாக இங்கு இருக்கிறேனே! சீக்கிரத்தில் அம்மாவை அழைத்துக்கொண்டு வந்துவிட வேண்டும். ஆனால் தாயார் புவனா எங்கே என்று கேட்டால் நாம் என்ன பதிலைச் சொல்லுவது? நான் மட்டும் சுகமாக இருக்கிறேன். புவனா எங்கு போனாளோ? நான் அவளைத் தேட வில்லை என்று சொன்னால் அம்மாவின் மனம் எவ்வளவு வருத்தப்படும்?' என்றெல்லாம் அடிக்கடி நினைத்து வருந்தினான்.

ஒரு நாள் பூபதி அரசனும் ராணியும் இருக்கும் சமயம் பார்த்து, ''மகாராஜா! நீங்கள் என்னை உங்கள் குழந்தை போலவே அன்பும், ஆதரவும், கல்வியும் கொடுத்து என்னைச் சுகத்தில் வைத்திருக்கிறீர்கள். ஆனால் எனக்கு மட்டும் பூரண சந்தோஷம் ஏற்பட மாட்டேனென்கிறது. அடிக்கடி என் தாயார் மனத் துயர மடைவாளே, அவள் அங்கு கஷ்டப்பட நான் மட்டும் சுகமாக இருக்கிறேனே என்பதை நினைத்தால் என்னையே எனக்குப் பிடிக்கவில்லை!'' என்றான்.

அரசனும் பெரிய ராணியும் ''அடாடா! உனக்குத் தாயார் இருப்பதை நீ ஏன் இது வரையில் எங்களுக்குச் சொல்லவில்லை?'' என்று ஆதரவோடு கேட்டார்கள்.

பிறகு பூபதி தானும் தனது தங்கையும் கடைக்குப் புறப்பட்டுச் சாலையோடு சென்ற கோச்சு வண்டியில் ஏறி உட்கார்ந்ததும், தூங்கிவிட்டதும், பிறகு வெகு தூரம் கடந்த பின் வண்டிக்காரனால் இறக்கி விடப் பட்டதும், சத்திரத்தில் வந்து படுத்ததும், காலையில் தங்கை புவனாவைக் காணாததும், வண்ணானிடம் வேலைக் கமர்ந்ததும் விவர மாகச் சொன்னான்.

அதற்கு ராணி, ''பூபதி, நீ நாளைக்கே உன் தாயை அழைத்து வரவேண்டும். இது நம் கட்டளை'' என்றாள்.

முன்னும் பின்னும் குதிரையின் மேல் சிப்பாய்கள் வர அரபிக் குதிரை கட்டிய கோச்சு வண்டியில் பூபதி நந்தியூரை நோக்கிப் புறப்பட்டான். நந்தியூரில் தன் தாயார் வேலை செய்து வரும் வீட்டுக்கு எதிரில் வந்து பூபதி இறங்கினதும் அந்தக் கிராமமே திரண்டு வந்தது போல் அவ்வளவு ஜனங்களும் கைகட்டி வாய் பொத்தி ஆச்சரியத் துடன் பார்த்து வியந்து நின்றனர்.

திடீரென்று மகனைக் கண்ட கமலா திடுக் கிட்டாள். ஆச்சரியத்துடன் ''அப்பா பூபதி!'' என்றாள். அவளால் மேலே பேச முடியவில்லை.

பூபதியும் கண்களில் நீர் பெருகத் தாயாரை அணைத்துக் கொண்டு, ''அம்மா, வருத்தப் படாதே! கடவுளருளால் உன் கஷ்டம் விடிந்தது. உன் மகன் நல்ல நிலைமை பெற்று உன்னை அழைத்துச் செல்ல வந்திருக் கிறேன். வா போகலாம். நீ கட்டிக்கொண் டிருக்கும் உடைகளைக் களைந்து விட்டு இந்த உடைகளை அணிந்து கொண்டு புறப்படு!'' என்று உடைகளைக் கொடுத்தான்.

பிள்ளை கொடுத்த உடைகளை அணிந்து கொண்ட கமலா, தன்னை வெகு சுத்தமாக ஒழுங்கு செய்து கொண்டு மகனுடன் வண்டியி லேறிக் கொண்டாள். பிறகு ''பூபதி! புவனாவும் சுகமாக இருக்கிறாளா?'' என்று மகளைப் பற்றி ஆவலுடன் கேட்கவே பூபதி, ''இருக்கிறாளம்மா. அவள் பெண்ணானதால் அவளுக்குத் தக்க இடத்திலிருக்கிறாள்'' என்று ஒருவிதமான பொய்யைச் சொல்லித் தாயின் மனதை நிம்மதிப் படுத்தினான். பிறகு பூபதி தாயாரை அழைத்துக்கொண்டு, ஜால புரிக்கு வந்து சேர்ந்தான்.

அரசன் ஜாலபுரியைச் சேர்ந்த தான புரத்தைப் பூபதிக்கு அளித்து அவனைத் தான புரத்து ஜமீன்தாராகச் செய்து வைத்தான்.

பூபதி அம்மாவுடன் ஆனந்தமாக ஜமீன் தாராக விளங்கிக் குடிகளின் அன்புக்குப் பாத்திரமாக இருந்து வந்தான்.

மானஸபுரத்து ஜமீன்தாரின் குமாரனுக்கு விவாகமென்று அரசன் அமரேந்திரனுக்கும் ஜமீன்தார் பூபதிக்கும் அழைப்பு வந்தது.

ஒரு சிற்றரசனுக்குச் சமமான அந்த ஜமீனின் அழைப்பைப் பாராட்டி அரசனும் பூபதியும் அக் கல்யாணத்திற்குச் சென்றனர். பூபதிக்குத் தன் தங்கை புவனாவைப் பற்றிய நினைவு அடிக்கடி வரும். அவளைக் கண்டு பிடிக்கப் பல முயற்சிகள் செய்து வந்தான். ஆனால் ஒன்றும் பயன் தருவதாயில்லை. இந்தக் கல்யாணத்துக்கு வந்ததும் இங்கே அவளையும் அறியாமல் அவன் கண்கள் புவனா இங்கே இருக்கிறாளா என்று தேடின.

பூபதியும் அரசனும் பிரத்தியேகமான இடத்துக்குச் சாப்பிடச் சென்றனர். அங்கே பெண்களுக்கு மத்தியில் புவனா இருந்தாள். பூபதி அவளைக் கண்டதும் "புவனா!" என்று கத்தி விட்டான். புவனாவுக்கு ஒன்றும் புரியவில்லை. வெகு காலத்துக்குப் பிறகு தன் அருமை அண்ணனைக் கண்டதில் அவளுக்குப் பேச நா எழவில்லை.

இதற்குள் தானபுரத்து ஜமீன்தார்தான் மணப் பெண்ணின் சொந்தத் தமையன் என்பது யாவருக்கும் தெரிந்துவிட்டது. மானசபுரத்து ஜமீன்தாரும் ஜமீன்தாரிணியும் அதுவரை புவனாவைச் சொந்தப் பெண்போல் ஆதரித்து வந்த தனபாலப் பிரபு, அவர் மனைவி முதலியோர்களும் அங்கு வந்து பூபதியையும் அரசனையும் தடபுடலான உபசாரனையுடன் வரவேற்றனர்.

புவனாவுக்குத் தன் தாயைப் பார்க்க வேண்டுமென்று ரொம்பவும் ஆவலாக இருப்பதைக் கண்ட தனபாலப் பிரபு உடனே பூபதியின் தாயாரை அழைத்து வர வண்டியனுப்பி வைத்தார். அன்று மாலையிலேயே சுசீலா தன் அருமைப் பெண் புவனாவைப் பார்க்க வந்து சேர்ந்தாள். அவள் ஆனந்தத்துக்கு இணை ஏது?

பிறகு புவனா, தான் முன்பு சத்திரத்துத் திண்ணையில் பூபதியை விட்டுப் பிரிந்து சென்ற கதையைச் சொன்னாள். அவள் திருடர் கூட்டத்தினிடையே சிக்கி வெகு தூரம் சென்றதையும் தனபாலப் பிரபு தன்னை அவர்களிடமிருந்து காப்பாற்றியதையும் விரிவாகச் சொன்னாள். அப்புறம், பூபதி தன் வரலாற்றைச் சொன்னதும் புவனா அடைந்த ஆனந்தத்துக்கு அளவே இல்லை.

முன்பு பூபதியும் புவனாவும் நந்திபுரத்தில் காளி கோவிலில் ஒளித்து வைத்த வைர மாலை தனபாலப் பிரபுவினுடையது என்று தான் அறிந்ததும், அதை அங்கிருந்து தக்க துணையுடன் எடுத்து வந்து அவரிடம் சேர்ப்பித்து விட்டதையும் புவனா சொன்னாள்.

பிறகு அங்கேயே கல்யாணப் பேச்சு ஆரம்பமாயிற்று. ஜாலபுரி அரசன் அமரேந்திரன் புவனாவைத் தான் மணந்து கொள்ளுவதாகத் தெரிவித்துவிட்டான். பூபதிக்குத் தன் தங்கை அநுராதாவைக் கொடுப்பதாக நிச்சயித்திருப்பதையும் தெரிவித்தான். புவனாவின் தாயார் சுசீலா அடைந்த ஆனந்தத்துக்கு எல்லையே இல்லை. இப்படி ஒரு சம்பவம் தன் குடும்பத்தில் நேரும் என்று அவள் கனவில்கூட நினைத்ததில்லை.

அரசன், பூபதி, புவனா, எல்லோரும் ஒரே ஆனந்தமாக ஊருக்குத் திரும்பினார்கள்.

ஜாலபுரியில் பிரமாதமாகப் பந்தல் போட்டு விவாக ஏற்பாடு நடந்தது. பிறகு பூபதிக்கும் அரசகுமாரி அநுராதாவுக்கும் விவாகம் நடந்தது. அதே சமயத்தில் அரசனுக்கும் புவனாவுக்கும் விவாகம் நடந்தது. இந்த இரண்டு விவாகத்தையும் ஜாலபுரி ஜனங்களெல்லாம் கூட்டமாக வந்திருந்து உற்சாகமாக நடத்தி வைத்தனர். (முற்றிற்று)

# தாங்க முடியாது!

ஒரு பெரிய மனிதர் ஒரு பங்களாவுக்குப் புதிதாகக் குடித்தனம் வந்தார். அவர் வந்ததும் வராததுமாகப் பக்கத்துப் பங்களாக்காரரிடம் போனார்.

"ஸார், இந்தப் பக்கத்தில் நாய்த் தொந்தரவு அதிகமோ?" என்று கேட்டார்.

"அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை, ஸார்! மேலும் இங்கே நாய் வளர்ப்பவர்களே மிகக் குறைவு. அதிலும் அப்படி நாய் வளர்க்கும் இரண்டொருத்தரும் உயர்ந்த சாதி நாய் வளர்ப்பதனால் சதா கட்டிப்போட்டு விடுகிறார்கள்! ஆகவே அவைகளினால் தொந்தரவு ஒன்றும் இல்லை!" என்றார் பக்கத்து வீட்டுக்காரர்.

"நான் நாய்களைக் கட்டிப் போடுவதைப் பற்றிக் கேட்கவில்லை. அவைகளைக் கட்டிப் போட்டிருந்தாலும் அவிழ்த்து விட்டிருந்தாலும் நான் அதைப் பற்றிக் கவலைப்படவில்லை. அவைகள் இராத்திரி வேளையில் ஓயாமல் குரைத்துத் தொந்தரவு செய்யுமோ என்றுதான் கேட்டேன்!" என்றார், மிகவும் கவலையுடன் புதிதாக வந்தவர்.

பக்கத்து பங்களாக்காரருக்கு அவர் இந்த விஷயத்தை எதற்காக அவ்வளவு அக்கறையோடு கேட்கிறார் என்பது புரியவில்லை.

"இல்லை, ஸார்! அப்படி ஒன்றும் குரைப்பதாகத் தெரியவில்லை. எதற்காக இவ்வளவு அக்கறையாக அதைப் பற்றிக் கேட்கிறீர்கள்? என்ன விசேஷம்?" என்று கேட்டார்.

அதற்குப் புதிதாக வந்தவர், "என்னிடம் இரண்டு நாய்கள் இருக்கின்றன. அவை இரண்டும் ஓயாமல் குரைக்கும். அந்த உபத்திரவம் போதாது என்று இங்குள்ள நாய்களும் குரைக்க ஆரம்பித்து விட்டால் என்னால் தாங்க முடியாது!" என்றார் சாவதானமாக! —விஜயம்



# மங்கள முடிவு!

சாமா



செல்வநாயகம் பிள்ளைக்குச் செல்லம் என்று ஒரு பெண் இருந்தாள். வெகு நாட்களாக அவளுக்குக் கல்யாணம் ஆகாத குறையில் அவருக்கு மூளைக் கோளாறு ஏற்பட்டு விட்டது. "நான் ஒரு அரசன். என் பெண்ணை ஒரு ராஜகுமாரனுக்குத்தான் கொடுப்பேன்!" என்று யார் பெண் பார்க்க வந்தாலும் சொல்லிக் கொண்டிருந்தார். எத்தனையோ பேர் வந்து விட்டுப் போய் விட்டனர்.

கடைசியில் சுந்தரம் வந்தான். அவனையும் அவர் "நீ ராஜகுமாரனாயிருந்தால் என் பெண்ணை மணக்கலாம்!" என்று கூறித் துரத்தி விட்டார். செல்லம் வருத்தம் தாங்க முடியாமல் அழுது விட்டாள்.

மறு நாள் சுந்தரம் வந்து அவரைப் பார்த்தான். சற்று நேரத்துக் கெல்லாம் வெளியே வந்து "கல்யாணத்துக்கு அவர் சம்மதம் தந்து விட்டார்!" என்றான். செல்லம் ஆச்சரியத்துடன், "அப்பா எப்படிச் சம்மதித்தார்!" என்று கேட்டாள்.

அவன், "நான் தலையில் சரிகைத் தலைப்பாகையுடன் போய் 'நான் ஒரு ராஜகுமாரன். உமது பெண்ணைக் கொடுப்பீரா!' என்று கேட்டேன். சம்மதித்து விட்டார்!" என்றான்.

சுந்தரத்தின் யுக்தியினால் செல்வநாயகத்துக்குப் பைத்தியமே தெளிந்துபோயிற்று.

சுந்தரம் ராஜகுமாரன் மாதிரி செல்லத்தை ஆடம்பரத்தோடு விவாகம் செய்து கொண்டான்.







# என் தலை தீபாவளி

மங்களா

"ஏண்டி மங்களம்! இந்த வருஷமும் தலை தீபாவளி இல்லையாமே? போன வருஷம் தான் உன் அம்மாவுக்கு உடம்பு சரியில்லாததால் ஒன்றும் செய்யச் சௌகரியப் படவில்லை என்றால் இந்த வருஷமும் ஏன் தடைப்படுகிறது என்றே விளங்கவில்லை. என்னமோ அம்மா! தலை தீபாவளி என்ற ஒன்றைச் செய்யா விட்டால் யாருக்குத்தான் திருப்தியா யிருக்கு?" என்று ஒரு அழகான இளமங்கையிடம் கூறினாள், அவள் தோழி ராதாமணி.

"அது சரி, தலை தீபாவளி இல்லையே என்று நானே ஏங்காத பொழுது எனக்கில்லாத வருத்தம் உனக்கு எதற்கு?" என வினவினாள் மங்களம்.

"என்ன இருந்தாலும் மனசுக்கு நிறைந்த சந்தோஷமளிப்பது தலைதீபாவளி யல்லவா?"

"அப்படியானால் எனக்கு அன்றே தலை தீபாவளியாகி விட்டதடி, ராதா!" என்று சொல்லிச் சிரித்தாள் மங்களம்.

"இதென்னடி கூத்து?" என்று வியந்து வினவிய ராதாமணியிடம் 'இதைக் கேள்,' என்று தன் கதையைச் சொல்லலானாள் மங்களம்.

★

"நல் வாழ்விற்குப் போதுமான அளவு ஊதியம் பெற்று வந்த சர்க்கார் உத்தியோகஸ்தரான என் தந்தை மூன்று மாத காலம் ஓய்வு பெற்றிருந்த வேளை அது. மூப்பத்தைந்து வயதிலேயே வாழ்வைத் துறந்து வேதாந்தியாகி விடுவேன் என்று பயமுறுத்தி என் அம்மாவின் மேல் ஆராக் காதல் கொண்டிருக்கும் என் தந்தைக்கு ஓய்வு நேரத்தைப் போக்கும் வழி புலப்படவில்லை. ஐம்பது வயதினை எட்டிப் பிடித்துப் பக்தி மார்க்கத்தில் மனசைச் செலுத்திப் பகவத்கீதை பாராயணம் பண்ணும் என் பாட்டி, புண்ணிய க்ஷேத்திரங்களுக்குப் போய் வரலாம் என்று சொன்னபொழுது அவள் கருத்து ஏற்கப்படவில்லை. கும்பகோணத்திலுள்ள தன் பிறந்தகத்திலேயே மூன்று மாதங்களும் இருந்து விடலாம் என்ற என் அம்மாவின் விருப்பமும் என் அப்பாவுக்குச் சரியெனப் படவில்லை.

"'மங்களா! நீ என்ன சொல்கிறாய்?' என்று என்னைப் பார்த்துக் கேட்டார் என் தந்தை. பதினாறுவயதிலே பள்ளிப்படிப்புக்கு முற்றுப் புள்ளி வைத்துவிட்டு வீட்டில் செல்லப் பெண்ணாக வளர்ந்து வந்த நான் ஏதாவது சொன்னால் அது நிச்சயம் நடந்து விடும் என்ற நம்பிக்கை எனக்கு இருந்தது.

"'கோயமுத்தூர் போய் வரலாம்' என்று சாவதானமாகச் சொன்னேன் நான்.

"தன் தம்பியின் வீட்டுக்குப் போவதை என் பாட்டி விரும்பியதாலும், என் அப்பாவுக்கும் அந்த விருப்பம் இருந்ததாலும் கோவை செல்வது நிச்சயமாகி விட்டது. அதற் கேற்றாப்போல் மறு நாள் மாமாவிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. எங்கள் வரவை அவர் வீட்டார் ஆவலோடு எதிர் பார்ப்பதாக எழுதி யிருந்தார் என் மாமா. (உண்மையில் அவர் என் தந்தைக்குத்தான் மாமா; நானும் அவரை 'மாமா' என்று தான் அழைத்து வந்தேன்.)

"புது முகங்களைப் பார்க்கப் போகிறோம் என்ற ஆவலால் என் மாமா வீட்டாரைப்

பற்றி என் பாட்டியிடம் விசாரித்தறிந்து கொண்டேன். கோயமுத்தூரிலே ஒரு மில்லில் மானேஜராக இருந்த என் மாமாவுக்கு இருபது வயதில் ராமு என்ற ஒரு பிள்ளையும், பதின்மூன்று வயதில் ரமா என்ற பெண்ணும் இருப்பதாகத் தெரிந்து கொண்டேன்.

"ஒரு நல்ல நாளிலே டெல்லியினின்றும் கிளம்பிய 'கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸ்' எங்களைச் சென்னையில் சேர்த்தது. அங்கிருந்து மாலையில் கிளம்பிய 'நீலகிரி எக்ஸ்பிரஸ்' காலை ஏழு மணிக்கு எங்களைக் கோயமுத்தூருக்கு அறிமுகப்படுத்தியது. ஸ்டேஷனுக்கு வந்திருந்த மாமா எங்களை அகம் நோக்கி அழைத்துச் சென்றார்.

"கச்சிதமாக அமைந்து அமைதி நிலவிய ஒரு அழகான வீட்டில் நாங்கள் நுழைந்தோம். கணவனுக்கேற்ற மனைவியாயமைந்த என் மாமி அப்பொழுதே என் உள்ளத்தைக் கவர்ந்து விட்டாள். மாமியின் பெண் ரமா என்னைக் கண்டதும் பல வருஷங்கள் பிரியாதவள் போல் என்னிடம் பழகியதும் எனக்கு ஒரு தனி இன்பம் அளித்தது.

"இவர்கள் தவிரக் கூடத்தில் மாட்டப்பட்டிருந்தது ஒரு இளைஞனின் 'போட்டோ'. அந்த இளைஞன் முகத்திலே ஒளிர்ந்த இரு கண்களும் என்னை விழுங்கி விடுவதுபோல் பார்த்தன. உதடுகளிலே தவழ்ந்த குறுநகை என்னுள் ஏதோ ஒரு உணர்வை எழுப்பியது.

"'அதுதான் நான்; தாங்கள் யாரோ?' என்ற குரல் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தேன். சித்திரம் உயிர் பெற்றெடுத்து வந்து உரையாடுவது போலிருந்தது. என்னையே பார்த்துக்கொண்டு நின்ற அந்த இளைஞன்தான் என் மாமாவின் மைந்தன் ராமுவாயிருக்கவேண்டும் என எண்ணித்த நான் உள்ளே விரைந்தேன்.

"'ரமா! யாரோ வந்திருக்கிறார், பார்!' எனச் சொல்லிக் கொண்டே என்னைப் பின் தொடர்ந்தார் அவர். காலையில் வெளியிற் சென்றவர் அப்போதுதான் திரும்பி வந்தார் போலும். எங்கள் வரவை அறியவில்லையோ!

இக்கிலையில் அங்கு வந்த ரமா எங்கள் வரவை அவர் அறியத் தெரியப் படுத்தினாள். வெட்கத்தை விட்டு உரையாடல் நலமென்று தோன்றியதால் நான் அவருடன் பேச வாரம்பித்தேன்.

"'நான்......நீங்கள்......' என்று தட்டுத் தடுமாறினேன். பாழாய்ப் போன நாக்கு உளற வாரம்பித்தது. இதற்குள் ரமா சிரித்தாள்.

"அந்தக் குறும்புக்காரியிடம் ஒரு கோபப் பார்வையைச் செலுத்தி விட்டு, ஒரு குறும்புச் சிரிப்புடன் என்னைப் பார்த்துக் கொண்டே உள்ளே சென்றார் என் ராமு.

"நாங்கள் கோயமுத்தூர் வந்து ஏறக்குறைய ஒரு மாதம் ஓடிவிட்டது. அதற்குள் என்னுள் தோன்றிய மாற்றத்தைக் கண்டு நானே வியந்தேன். கள்ளங் கபடற்ற நிலையில் செல்லப் பெண்ணாகத் திரிந்து வந்த நான் அடக்கம் மிக்கவளாக இப்போது தென்பட்டேன். விஷமம் செய்த குழந்தை, சாதுவாக உட்கார்ந்திருப்பதைப் போலக் காதற் புயலில் சிக்கித் தவித்த என் உள்ளம் அடக்கத்துடன் அச்சம் மிகுந்து அமைந்தது. தலைமறைவாகத் திரியும் ஒரு குற்றவாளியின் நிலையில் நானிருந்தேன்.

"ராமுவும் என்பால் அன்பு செலுத்துகிறார் என்பதை யறிய வெகு நாளாகவில்லை.

"அம்மாவின் பிறந்தகப் பித்து அளவுக்கு மீறித் தோன்றியதால் எல்லோரும் கும்பகோணம் போவது என்று நிர்மானமாயிற்று. பிறந்தகத்தில்தான் தீபாவளிப் பண்டிகை கொண்டாடப்பட வேண்டும் என்பது அம்மாவின் பிடிவாதக் கொள்கை. தீபாவளிக்குத் தங்களுடனேயே இருக்க வேண்டும் என்று மாமா விரும்பினார். எனக்கோ கோவையிலேயே இருக்கவேண்டும் என்றுதான் ஆசை. ஆனால் அதை வெளியிற் சொல்லுதல் நல்லதல்லவே? நல்ல வேளையாக எல்லோரும் ஒரு முடிவுக்கு வந்தனர்.

"துள்ளிக் குதித்தோடி வந்தாள், ரமா. அவளைப் பிடித்து நிறுத்திய ராமு 'என்னடி விஷயம்?' என்றார். ஆயிரம் பிகு பண்ணிக் கொண்டு மெதுவாக ஆரம்பித்தாள் ரமா.

"'கும்பகோணத்திற்கு ஒருத்தரைத் தவிர மத்தவா எல்லாரும் போகப் போறா. அத்தை......'

"'அத்தை மட்டும்தான் நம்மோடு இருக்கப் போகிறாளா?' என்ற ராமுவின் குரலில் ஏக்கம் தொனித்தது.



"'அட! அவசரக் குடுக்கை! சொல்றதை முழுக்கக் கேட்டுக்கோ. அத்தை, அத்தான், அத்தா மன்னி மூணு பேருந்தான் போவா. மங்களாவுக்கு இங்குதான் தலை தீபாவளி' என்று உரக்கக் கூறிச் சிரித்தாள் ரமா. அதைக் கேட்டதும் ராமுவின் உள்ளம் எவ்வளவு மகிழ்ச்சியடைந்தது என்பதைக் கடைக் கண்களால் அவர் முகத்தைப் பார்த்துத் தெரிந்து கொண்டேன்.

"அன்று தீபாவளி; அன்றுபோல் என்றும் நான் மகிழ்ந்ததில்லை. அடிக்கடி நானும் ராமுவும் சந்தித்துக் கண்களால் பேசிக் கொண்டோம். எங்கள் உட்கருத்தை மாமாவும் மாமியும் புரிந்துகொண்டு விட்டனர் என்பது அவர்கள் பேச்சினின்றும் விளங்கியது.

"மிக உயர்ந்த ரகத் துணிகள் எல்லாம் குவிந்திருப்பதைப் பார்த்த என் மாமி, 'தலை தீபாவளி பண்றேம்னு மனசுக்குள்ளே நினைச்சுண்டிருக்கேளா?' என்று மாமாவிடம் வினவிச் சிரித்ததும், அதற்கு மாமாவும், 'பெண் வீட்டுக்காரா எல்லாரும் கும்பகோணம் போயிருப்பதால் பிள்ளை வீட்டாரே தலை தீபாவளிச் செலவை ஒத்துக் கொண்டிருக்கா' என்று சொல்லிச் சிரித்ததும் இன்னும் எனக்கு ஞாபகத்தில் இருக்கிறது.

"'இரவு ஒரு மணிக்கு எழுந்திருக்க வேண்டும்; எல்லோரும் போய்த் தூங்கலாம்' என்று சொல்லிவிட்டு மாமா தன்னறைக்குத் தூங்கச் சென்றார். மாமியின் அருகில் படுத்திருந்த எனக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. ராமுவோ தன்னறையில் காலேஜ் புத்தகமொன்றைக் கையில் வைத்துக் கொண்டு படிப்பதாகப் பாவனை செய்து கொண்டிருந்தார். அவருடன் பேச வேண்டும் என்ற ஆவல் மிகுந்தாலும், அச்சம், இச்சையை அடக்கியாண்டது. தூங்கிக் கொண்டிருந்த மாமி விழித்துக் கொண்டாள். ராமுவின் அறையில் விளக்கு எரிவதைக் கண்டு, 'ராமு இன்னும் தூங்கலையா? விளக்கைப் போட்டுக் கொண்டு தூங்குகிறானோ என்னவோ! நீ பார்த்து விட்டு வா!' என்றாள் மாமி.

"'போங்கோ, மாமி!' என்று சொல்ல வாயெடுத்தேன், அப்படிச் சொன்னால் எங்கே, 'சரி! நீ போகவேண்டாம்?' என்று சொல்லி விட்டால் என்ன செய்வது என்று எழுந்திருந்து ராமுவின் அறைக்குப் போனேன்.

"'யாரது? ரமாவா?' என்றார் ராமு.

"'இல்லை. நான்தான்' என்று சொல்வதற்குள் என் உடம்பெல்லாம் வியர்த்தது.

"ஓஹோ! மங்களாவா! உள்ளே வாயேன்!" என்றார் அவர்.

"'விளக்கு எரிகிறதே! தூங்குகிறீர்களா, விழித்துக் கொண்டிருக்கிறீர்களா என்று...'

"......அம்மா பார்க்கச் சொன்னாளாக்கும்! அம்மா எப்பொழுதும் இப்படித்தான். விளக்கும் எரிகிறது. அவரும் படித்துக் கொண்டிருக்கிறார் என்று சொல்லு!"

"இல்லை. காலையில் சீக்கிரம் எழுந்திருக்க வேண்டாமா?" என்றேன்.

"'தூங்கினால்தானே எழுந்திருக்க வேண்டும்?' என்றார் அவர் குறும்பாக.

அப்பொழுது அவரது கரத்திலிருந்த புஸ்தகத்தைப் பார்த்த நான் சிரித்துவிட்டேன். புத்தகத்தைத் தலைகீழாகப் பிடித்துக் கொண்டிருந்தார் அவர்.

"'எதைப் படிப்பதாக பாவனை செய்கிறீர்கள்?' என்றேன் நான்.

"கதைப் புஸ்தகம்! படித்ததைச் சொல்லட்டுமா?' என்றார் அவர்.

"'எங்கே? சொல்லுங்கள், பார்ப்போம்!' என்றேன் நான்.

"என்னென்னவோ சொல்லிக் கொண்டே வந்த அவர் பேச்சை மாற்றுவதைக் கவனித்து அவரையே நோக்கினேன் நான். அவர் என்னை நோக்கியவாறே பேசலானார்.

"'அவள் கற்ற கற்காரிகை; இளமையின் எழில் அவளது இயல்பான அழகைச் சிறப்புடன் சோபிக்கச் செய்தது. அவள் முகத்தின் கவர்ச்சியில் ஒளியேற்றிய இரு கண்கள் அவளது செந்தாமரைக் கன்னங்களின் அழகை விளக்கிக் காட்டின. அலையலையாகப் பரந்து படிந்த அவளது கூந்தல் 'கடலழகி இவளோ?' எனக் கண்டோர் மயங்கும் வண்ணம் அவள் தோள்களில் தவழ்ந்து புரண்டது. அவளது முத்துப் பற்களின் ஒளிக்கு உவமை கூற முடியாது' என்று படித்தபடி அவர் காதல் கனிந்த கண்களுடன் என்னைப் பார்த்தார். ஆவல் ததும்பும் விழிகளுடன் அவரையே நோக்கினேன். மணி மூன்றடித்தது. 'மணி மூன்றா?' எனப் பதறினேன் நான்.

"அதற்குள், ஒவ்வொருத்தராகப் பேர் சொல்லி மாமா எல்லோரையும் தீபாவளிப் பண்டிகை கொண்டாட எழுப்புவது கேட்டது. தூரத்தில் வெடிச் சத்தம் கேட்டது. தூங்காமலே தீபாவளி வந்தது.

"அன்று நாங்கள் பெற்ற பேறு வேறு எவராலும் பெற முடியாதது. இன்று எங்களுக்குத் திருமணம் முடிந்து இரண்டாண்டுகள் முடிந்தன.

"இடையே தோன்றிய சிற்சில அசௌகரியங்களால் எங்களுக்குத் தலை தீபாவளி நடத்த இயலவில்லை. மற்றவர்களுக்கு அது ஒரு குறையாகத் தோன்றலாம். நாங்கள் அதை ஒரு பொருட்டாக மதிக்கவில்லை. எங்கள் மணம் நிகழ்வதன் முன்னர் நடந்த தீபாவளி தந்த மகிழ்ச்சிக்கு ஈடு வேறெதுவுமில்லை. ராதா! தலை தீபாவளி என்ற ஒன்று சந்தோஷம் பொங்குவதற்காகவும் மனத் திருப்திக்காகவும் கொண்டாடப்படுகின்றது என்றால், நாங்களும் தலை தீபாவளிப் பண்டிகை கொண்டாடி விட்டோம்" என்று மங்களம் கதையை முடித்தாள்.

"மங்களா! உண்மையில் நீதான் அதிர்ஷ்டசாலி" என்று ராதாமணி கூறிவிட்டுத் தன் வீட்டை நோக்கிச் சென்றாள்.

# நோய்க்குப் பிறகு துரிதமாக

## தேர்வு

## பெற!




ஜுரத்தால் பலவீனமும், சோர்வும் அடைந்திருந்தால், உடல் தேறுவதற்கு ஓவல்டினைவிடச் சிறந்த டானிக் கிடையாது. இந்த ருசியான உணவுப் பானம் சுலபமாக ஜீரணமாவதுடன், உடல் தேர்வுக்கு வேண்டிய பிரத்யேக சக்தி தரும் சமர்த்த உணவுமாகும். அதில் அத்யாவசியமான வஸ்துக்களான பசுவின் மட்டுப்பால், பழுத்த பார்லி மால்ட், கோக்கோ, இயற்கையான பாஸ்பேட்டுகள், பி & டி விடமின்களும் சேர்க்கப்பட்டு சாஸ்திரீயமாக தயாரிக்கப்பட்டதாகும். ஓவல்டினில் இருக்கும் போஷணை மற்றும் விடமின் சத்துக்களும் இன்றியமையாதவை. ஓவல்டினைப் போலச் சிறந்தது வேறு கிடையாது.

டாக்டர்கள் நோய்க்குப் பிறகு உடல் தேற ஓவல்டினை சிபாரிசு செய்கிறார்கள். இன்றியமையாத டானிக் உணவு—பானம்—போலிகளைத் தள்ளிவிடுங்கள்.

விநியோகஸ்தர்கள்: கிரஹாம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லிட்.




# ஓ வ ல் டி ன்

**சுகவீனத்திலிருந்து ஆரோக்கியத்திற்கு !**

PV. 324

# இடைக்கால 'மனைவி!'

ஆசிரியர்: கே. எம். முன்ஷி ★ தமிழாக்கம்: ரா. வி.

இருபதாம் நூற்றாண்டிலே வாழும் பத்னி பராயணர்களான ராமச்சந்திரர்களே! மேலே உள்ள தலைப்பைக் கண்ணுற்று மிரளாதீர்கள்; திடுக்கிட்டு எகிறிக் குதிக்காதீர்கள்; துணுக்குற்றுக் கண்களை மூடிக் கொள்ளாதீர்கள். இதற்குள் என்ன ரகசியம் புதைந்து கிடக்கின்றதோ என்று எண்ணி, அதைக் கண்டு பிடித்து விட்டுத்தான் மறு காரியம் என்று கங்கணம் கட்டிக் கொண்டு மானங்கெட்ட கற்பனையின் உதவியை நாடி வீண் முயற்சியில் இறங்காதீர்கள். ஏனெனில் நான் பத்னி விரதபாலனம் செய்வதில் நம்பிக்கை கொண்டவன். இவ்விஷயத்தில் நான் யாருக்கும் தாழ்ந்தவன் அல்ல. அப்படியே நான் தப்பித் தவறி மனம் சலித்து மாற முயன்றாலும், என் கிருஹத்தில் இருக்கும் ஜகதம்பா போன்ற என் சகதர்மிணி கத்தியின் கூர்மையை யொத்த இந்த விரதத்திலிருந்து நழுவுவதற்கு எனக்குச் சந்தர்ப்பமோ அவகாசமோ சிறிதும் அளிப்பதில்லை. ஆகவே, அந்தத் தைரியத்தில் தான் நீங்கள் நிஷ்கவலையாக நிம்மதியாக மேலே படிக்கலாம் என்று நான் தைரியமாகச் சொல்லுகிறேன்.

*19......* வருஷம் வைகாசி மாதத்திலே விவாகம் என்னும் தொத்து நோய் குஜராத் முழுவதும் தன் பலம் முழுவதையும் ஒருங்கே காட்டித் தன் கை வரிசையைக் காட்டியது என்பது எல்லோருக்கும் நினைவிருக்கலாம். அதனால் எத்தனையோ பெண்களுக்கும் பிள்ளைகளுக்கும் கால் கட்டுக் கைக் கட்டுப் போட்டு வாய்ப் பூட்டும் போடப்பட்டது என்பதை யாரும் இவ்வளவு சீக்கிரத்தில் மறந்து விடுவதற்கில்லை.

அதற்கு இரண்டு வருஷங்களுக்கு முன்பு நான் ரெவின்யு இலாக்காவில் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் என்னும் பதவியில் தாசில்தார்களின் வீட்டிலே பஞ்சபட்ச பரமான்னங்களுடன் நேர்த்தியான விருந்து உண்ணும் உத்தியோகம் பார்த்து வந்தேன். அச்சமயம்தான் எனக்கு பார்துவா கிராமத்து வாசியான தயாள்ஜி பாயியுடன் நெருங்கிய நட்பு ஏற்பட்டது. இந்த நட்பு எப்படி ஏற்பட்டது என்பதை ஏராளமாக யுத்தக் கடன் சேகரித்துக் கொடுத்து அதன் மகிமையின் காரணமாக மாஜிஸ்ட்ரேட் ஆகிவிட்ட நான் இங்கே இச்சமயத்தில் சொல்லுவதற்கில்லை. ஆனால் ஒரே ஒரு விஷயத்தை மட்டும் இங்கே சொல்லுவதில் தவறில்லை என்று எண்ணுகிறேன்.

அந்தக் கல்யாண காலத்தில் அவருடைய மூன்று பிள்ளைகளுக்கும் கல்யாணம் நடப்பதாயிருந்தது. அந்த அரிய சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு நான் 'வார் லோன்' வாங்கப் போய் விட்டால் அவர்கள் வீட்டு விக்ன விநாயகரான கணபதியின் விக்ரஹம் கூடத் தும்பிக்கையை நேரே நிமிர்த்திக் கொண்டு உட்கார அஞ்சுவார் என்றால் நீங்களே என் பெருமையைச் சிந்தித்துப் பார்த்துக் கொள்ளுங்களேன்! எனக்கும் அவருக்கும் ஏற்பட்ட நெருங்கிய தொடர்புக்கு இதைக் காட்டிலும் முக்கியமான வேறு நல்ல காரணத்தை நான் எப்படிக் கற்பித்துக் கூற முடியும்!



ரயிலிருந்து இறங்கி........

ஸப் கலெக்டர் பதவியை அடைந்திருந்த நான் அப்பொழுதுதான் பூனாவிலிருந்து சர்க்கார் வேலையை முடித்துக்கொண்டு ஊருக்குத் திரும்பிக் கொண்டிருந்தேன். எனக்கு இரண்டாவது வகுப்பில் பிரயாணம் செய்யும் உரிமை உண்டு. சர்க்கார் காரியமாகப் போனால் எனக்கு இரண்டாவது வகுப்புக்கு உரிய கட்டணத்தைச் சர்க்கார் கொடுத்து வந்தது. ஆனால் பணத்தை மிச்சம் பிடிக்கும் எண்ணத்தில் நான் மூன்றாவது வகுப்பில் தான் பிரயாணம் செய்வது வழக்கம். ரெயில்வே கட்டணத்தை மட்டும் அல்ல; எனக்குக் கிடைக்கும் தினசரிப் படியிலும்கூட நான் நல்ல மிச்சம் பிடித்து விடுவேன். ஆகவேதான் நான் வண்டி நிற்கும் இடமான அந்தச் சிறு ஸ்டேஷனுக்குச் சென்று—அந்த ஸ்டேஷனின் பெயரை இங்கே குறிப்பிடுவது அநாவசியம் — ஒன்பது மணி பாஸஞ்சர் வண்டிக்கு பார்துவாவுக்கு டிக்கட் வாங்கிக் கொண்டு மூன்றாவது வகுப்புப் பெட்டியில் ஏறி உட்கார்ந்தேன்.

இந்த வண்டியில் ஒரு சௌகரியம் என்ன வென்றால், பெரும்

பாலும் புதிதாகப் பிரயாணம் செய்யும் யாத்ரீகர்கள்தான் ஏறுவார்கள். பழைய பழகிய முகத்தைப் பார்க்க முடியாது. அடிக்கடி பிரயாணம் செய்து அலுத்துப் போயிருக்கும் பிரயாணிகள்' இந்த வண்டியை ஏறெடுத்துக் கூடப் பார்க்க மாட்டார்கள். இந்த வண்டியில் இன்னொரு சௌகரியம் என்னவென்றால், காலை நீட்டிக் கொண்டு 'ஹாயா'கப் படுத்துக் கொள்ள இடம் கிடைக்கும். அடுத்தபடியாக, மேலதிகாரிகள் இதில் பிரயாணம் செய்வது மிகவும் அபூர்வம். ஆகவே, 'மூன்றாவது வகுப்புப் பெட்டியில் ஏன் பிரயாணம் செய்கிறாய்! இன்று 'ஹெட் குவார்ட்டரி'ல் இருக்கவேண்டிய நாளாயிற்றே! எங்கே போகிறாய்!' என்றெல்லாம் தொணதொணவென்று கேள்விகளுக்குமேல் கேள்விகள் கேட்டு மூளையைக் குழப்பும் மனிதர்களிடம் மாட்டிக் கொள்ளுவதும் அபூர்வம்.

நான் சாலி ரோடில் — அடடா! ஸ்டேஷனின் பெயரைச் சொல்லி விட்டேனே! — பாதகமில்லை; ரயிலேறினேன். நான் ஏறிய வண்டியில் ஒரு பெண் உட்கார்ந்திருந்தாள். அவளுக்கு இருபது வயதிருக்கலாம். பெண்களுக்கு இயல்பான நாணம் அவள் அழகுக்கு இன்னும் அழகு செய்து கொண்டிருந்தது. சிவந்த உதடுகளில் சிரிப்புத் தாண்டவமாடிக் காண்போரின் கண்களைச் சிறைப்படுத்திக் கொண்டிருந்தது. அவளுக்கு அ[illegible]கில் அவளுடைய இரண்டு வயதுக் குழந்தை குறுகுறுப்பாக உட்கார்ந்திருந்தது. இன்னொரு பலகையில் ஒரு வாலிபன் காலை அந்தப் பெண்ணின் பக்கம் நீட்டிப் படுத்துக் கொண்டு தூங்க முயன்று கொண்டிருந்தான். அவன் அந்தப் பெண்ணின் கணவனாக இருக்க வேண்டும் என்று தோன்றியது.

கிராண்ட் ரோடில் வண்டி நின்றதும், வயது முதிர்ந்த தேசாய் ஒருவர் கர்நாடக பாணியில் சிவப்புத் தலைப்பா தரித்துக் கொண்டு என் அருகில் வந்து அமர்ந்தார். அவர் வாய் சிவக்க, வெற்றிலைச் சாறு வழியத் தாம்பூலம் தரித்துக் கொண்டிருந்தார்.

எனக்கோ பேச்சு என்றால் கொஞ்சம் பிடிக்கும். ஊர் ஊராக, ஜில்லா ஜில்லாவாகச் சுற்றிச் சிநேகம் பிடிப்பதில் எனக்கு நிகர் நான்தான். ஆகவே, தேசாயை மெதுவாகப் பேச்சுக்கு இழுத்து லோகாபிராமமாகப் பேசிச் சிநேகம் செய்துகொண்டேன்.

பாம்கூருக்கு வந்ததும் எனக்குப் பசி எடுத்தது. ராத்திரி பார்குவாவுக்குப் போய் விருந்துச் சாப்பாட்டை ஒரு கை பார்த்தாக வேண்டும். வயிற்றை விருந்துக்குத் தயார் செய்து கொள்ள வெறும் பழங்களை மட்டும் சாப்பிடுவதுதான் நல்லது என்று எண்ணி அரை டஜன் வாழைப் பழத்தை வாங்கி அதில் பாதியை உரித்து வாய் வழியாக வயிற்றுக்குள் தள்ளி மிகுதியைக் காலடிகளில் வைத்துக் கொண்டேன்.

கடுகு மலையானது, எள்ளு பனையானது என்ற பழமொழிகளை நினைவு கூறும்பொழுது நேயர்களிடம் ஒரு விஷயத்தைக் கூறாமல் இருக்க முடியவில்லை. நான் பால்கரில் வாழைப் பழம் வாங்கிப் பாதியைத் தின்று பாதியை எனக்கும் அந்தப் பெண்ணுக்கும் மத்தியில் வைக்காமல் முழுவதையுமே தின்றிருந்தேனானால், 'இடைக்கால மனைவி' என்னும் இந்தக் கதையை நான் எழுத வேண்டிய அவசியமும் நேர்ந்திராது; நேயர்களுக்குப் படிக்க வேண்டிய சிரமும் ஏற்பட்டிராது.

ஆனால் நடப்பது என்னவோ நடந்து விட்டது. இரண்டு வயதுகூட நிரம்பாத அந்த அசகாயச் சூரப் பயல் தாயின் பக்கத்திலிருந்து எப்பொழுது கீழே இறங்கினானோ, எனக்குத் தெரியாது. ஆனந்த நடைபோட்டுக் கொண்டும் குதூகலக் குரல் கொடுத்துக் கொண்டும் அவன் மெதுவாக வாழைப் பழத்தை நோக்கிப் போகலானான்.

நானோ பி. ஏ. பட்டம் பெற்றவன். கல்லூரியில் கல்வி பயின்று வந்த காலம் முதற்கொண்டே மாதர் முன்னேற்றம், பெண்கள் பெருமை, ஸ்திரீகள் சுதந்திரம் போன்ற விஷயங்களில் முன்னேற்ற நோக்கம் கொண்டவன்; ஆண்களோடு பெண்களும் சரிக்குச் சமானமாக வாழ வேண்டும் என்ற கொள்கை கொண்டவன். ஆகவே, என் உள்ளத்தின் ஆழத்தில் அழுந்திக் கிடந்த 'பெண்களுக்குப் பெருமைநிறைந்த உரிமை தர வேண்டும்' என்ற உணர்ச்சிவிதை வெடித்தது; அதிலிருந்து முளையும் கிளம்பியது. உடனே ஒரு வாழைப் பழத்தை எடுத்து விண்டு அந்தக் குழந்தையின் கையில் கொடுத்தேன். அவன் ஆனந்தத்தால் கண்கள் அகல விரியச் சிரித்த முகத்துடன் என்னையே பார்த்தவாறிருந்தான். நான் கைநீட்டி குழந்தையைப் பக்கத்தில் அழைத்தேன்.

குழந்தையின் தாயார் குளிர்ந்த பார்வையுடன் என்னைப் பார்த்து லேசாகச் சிரித்தவாறு, "இருக்கட்டும், வேண்டாம். வேட்டியை வீணாக்கி விடுவான்!" என்றாள்.

"அதனால் என்ன!" என்று நானும் சற்று உரிமையுடன் சொன்னேன். குருட்டாம் போக்கில் வைக்கும் குறி சில சமயம் சரியாகப் பட்டு விடுவதுண்டல்லவா! அது போல் எங்கள் பேச்சு எங்களிடையே எங்களை யறியாமல் ஏதோ ஒரு தொடர்பை உண்டு பண்ணி விட்டது போலும்! என் அருகில் உட்கார்ந்திருந்த தேசாய் துப்பறியும் கதை எழுதுவதில் வல்லவரான ஷெர்லாக் ஹோம்ஸாகவே ஆகிவிட்டார். அவர் தம் மனத்தில் நான் குழந்தையின் தகப்பனார் என்றும் அந்தப் பெண்



இரண்டாம் வகுப்புக் கெதிரே......



அறைக்குள்ளே நுழைந்தேன்

தாடார் என்றும் தீர்மானித்து எங்கள் இருவரையும் கணவன் மனைவியாக்கி மனத்தில் மூன்று முடிச்சும் போட்டுக் கொண்டு விட்டார்.

பால்கரிலிருந்து வண்டி புறப்பட்டதும் தேசாய் தம் பையை அவிழ்த்து வெற்றிலை மடித்துப் பீடா பண்ண ஆரம்பித்தார். ஒன்று, இரண்டு, மூன்று நான்கு பீடா பண்ணிவிட்டார். பிறகு சிரித்துப் பேசியவாறே கிழவர் தம் மனைவிக்கு ஒரு பீடாவைக் கொடுத்தார். இன்னொன்றைத் தம் வாயில் போட்டுக் கொண்டார். மூன்றாவதை எனக்குக் கொடுத்தார். பிறகு கையினால் ஜாடை காட்டி நாலாவது பீடாவை அவளுக்கு, அதுதான் அந்தப் பெண்ணுக்குக் கொடுக்குமாறு சொன்னார்.

எனக்குத் தர்ம சங்கடமாகப் போய்விட்டது. உள்ளத்திலே ஒரு கலவரம் மூண்டது. நானோ கல்யாணமானவன். டெப் கலெக்டர் பதவியில் இருப்பவன். அவளோ வயது வந்த பெண். அத்துடன் கல்யாணமானவள். ஒரு குழந்தைக்குத் தாய் வேறு. அதுமட்டும் அல்ல; எனக்கு முன் பின் சிறிதும் அறிமுகம் இல்லாதவள். இரண்டு வார்த்தை கூட அவளுடன் பேசி நான் அறியேன். அப்படியிருக்கும் பொழுது அவளுக்கு நான் எப்படி வெற்றிலைப் பீடா கொடுப்பது? எனக்குத் தலை சுழன்றது. அவளுக்குப் பீடா கொடுக்கும் பெருமையை அவரே ஏற்றுக் கொள்ளட்டும் என்று எண்ணி நான் கையினால் ஜாடை காட்டினேன், பீடாவைப் பெண்ணின் கையில் கொடுக்குமாறு தேசாய்க்கு நாம் வீணில் ஏன் ஜாடை காட்ட வேண்டும்! வழியோடு போகிற வினையை யாராவது விலைக்கு வாங்கிக் கொள்வார்களா! நாம் சொல்லி விட்டோம் என்பதற்காகத் தேசாய் தாம் அப்படிச் செய்து விடுவாரா! அப்படிச் செய்ய அவருக்கு என்ன பைத்தியமா பிடித்திருக்கிறது! 'டேய்! நல்ல மனுஷ்யன் அப்பா, நீ! என்ன காரியம் செய்யத் துணிந்தாய்!' என்று என் மனம் என்னை அதட்டியது. 'டேய், முட்டாள்! தூங்கும் இந்த ஆசாமி விழித்துக் கொண்டு, அவன் மனைவிக்கு நீ வெற்றிலை கொடுப்பதைப் பார்த்துவிட்டால், உன் எலும்பைச் சுக்குச் சுக்காக முறித்துப் போட்டு விடுவானே! உன் மானம் மரியாதையெல்லாம் கப்பல் ஏறி விடுமே! ஊர்-உலகம், நாடு-நகரம் எல்லாம் சிரிக்குமே! பொறுப்புத் தெரியாத பிண்டமே!' என்றும் என்னை இடித்தும் கூறியது.

என்ன செய்வது என்று தெரியாமல் விழித்தேன். எதேச்சையாக என் பார்வை அந்தப் பெண்ணின் மீது விழுந்தது. அவள் பார்த்த அந்தப் பார்வை அவளுக்கு விஷயம் நன்கு விளங்கி விட்டது என்பதை எடுத்துக் காட்டியது. தேசாய் தப்பாகப் புரிந்து கொண்டிருக்கிறார் என்பதையும் அவள் நன்றாகப் புரிந்து கொண்டிருக்க வேண்டும். இல்லாவிட்டால் குனிந்த தலை நிமிராமல் வந்த சிரிப்பையும் அடக்க முடியாமல் அவள் அப்படித் திண்டாடுவதற்கு நியாயம் இல்லையல்லவா! அவள் ஜன்னல் வழியாக முகத்தை வெளியே நீட்டி சிரிப்பை அடக்கிக் கொள்ள வெகு பிரயாசைப் பட்டாள். ஆனால் நான் அழுவதா, சிரிப்பதா என்று நிர்மாணிக்க முடியாமல் தவித்தேன்.

'அட! நீர் என்ன ஐயா நீர்! விசித்திரப் பிரகிருதியாயிருக்கிறீர்!'' என்றார் தேசாய்.

'ஆமாம்' என்று சொல்ல நானும் வாய் எடுத்தேன். நல்ல வேளையாக நாக்குச் சத்தியாக்கிரகமும் செய்தது. ஏதாவது ஒன்றுக்கொன்று பேச்சுக்கு இடம் ஏற்பட்டு விட்டால் என்ன செய்வது என்ற பயம் என்னைப் பிடித்துக் கொண்டது. ஆகவே, அரைக் கண்ணால் அந்தத் தூங்கும் மனிதனைப் பார்த்துக் கொண்டும், அரைக் கண்ணால் அந்தப் பெண்ணைப் பார்த்தவாறும், வெற்றிலைப் பீடாவைத் தேசாயின் கையிலிருந்து வாங்கிப் பயந்தவாறே அந்தப் பெண்ணிடம் நீட்டினேன்.

அந்தப் பெண்ணுக்கும் இது ஏதோ வேடிக்கையாகத் தோன்றியது போலும். புடவைத் தலைப்புக்குள்ளிருந்த தன் கையை நீட்டி என் கையில் இருந்த பீடாவை வாங்கிக் கொண்டாள். பிறகு இச் செய்கையினால் பீறிட்டுக் கொண்டு வரும் சிரிப்பை அடக்கிக் கொள்வதற்காக அந்தப் பீடாவையே வாயில் போட்டுக்கொண்டு சுவைக்கலானாள். வாய் நிறைய வெற்றிலையைப் போட்டுக் கொண்டு குதப்பத் தொடங்கிவிட்டால், அப்புறம் எப்படிச் சிரிப்பது! ஆனால் எங்கள் பொல்லாத கண்கள் பேசாமல் இருந்தால்தானே! ஒன்றை ஒன்று சந்தித்து ஏதோ பேசிக் கொண்டன. அதைத் தொடர்ந்தாற்போல இரண்டு மூன்று நிமிஷங்களுக்குள்ளாக நிகழ்ந்த விந்தைச் செய்கைகள் நினைவுக்கு வந்தன. கூடவே சிரிப்பும் வந்தது.

இவ்வாறு இரண்டொரு மணி நேரம் கழிந்து விட்டது. நான் இறங்க வேண்டிய ஸ்டேஷனும் வந்துவிட்டது. தேசாய் இறங்க வேண்டிய ஸ்டேஷனும் அதுதான். படுத்திருந்த அந்த

வாலிபனும் தூக்கம் கலைந்து எழுந்து அந்த ஸ்டேஷனில் இறங்கத் தன்னைத் தயார் செய்து கொண்டான். அதைப் பார்த்த அந்தப் பெண்ணும் இறங்க ஆயத்தமானாள். கடந்த இரண்டு மணி நேரப் பதற்றமும், சிரிப்பை அடக்கும் முயற்சியும் எனக்கு இனந்தெரியாத இன்பத்தை அளித்தன. இன்பலோகத்திலே சஞ்சரித்துக் கொண்டிருந்த என் மனத்தை ஸ்டேஷன் இவ்வளவு சீக்கிரம் வந்தது என்னவோ செய்தது.

ஆனால் என்ன செய்வது! வண்டி நின்றதும் தோசாய் தம் சம்சாரத்துடன் இறங்கி விட்டார். அடுத்தபடியாக நான் இறங்கினேன். அழைத்துப் போக வருகிறவர்கள் நான் எந்த வகுப்பிலிருந்து இறங்குகிறேன் என்பதைப் பார்ப்பதற்கு முன்பாகவே, இரண்டாவது பெட்டிக் கெதிரே போய் நின்று விடுவது என் வழக்கம். ஆகவே, நான் மூன்றாவது வகுப்புப் பெட்டிக் கெதிரே அதிக நேரம் நிற்க முடியாதல்லவா! இருந்தாலும் இறங்கும்பொழுது ஒரு முறை திரும்பிப் பார்த்தேன். அவளும் பின்னாலேயே இறங்கிக் கொண்டிருந்தாள். இறங்கும்பொழுது, ஆஜானுபாகுவான அந்த வாலிபன் தூக்கத்தினால் கரகரத்த தொண்டையுடன், "நீ இந்தப் பெட்டிக் கெதிரேயே நின்று கொண்டிரு. சகலியாவின் வேட்டி இங்கேயே தங்கிப் போய்விட்டது. கொடுத்து விட்டு வந்துவிடுகிறேன்" என்று சொன்னது என் காதில் தெளிவாக விழுந்தது.

அந்தச் சின்னஞ் சிறு ஸ்டேஷனிலும் கூட நல்ல கூட்டமும் கூச்சலுமாக இருந்தது. இறங்குபவர்களை வரவேற்க வந்தவர்களின் எண்ணிக்கை இறங்குபவர்களைக் காட்டிலும் இரண்டு மடங்கு அதிகமாகவிருந்தது. நான் என் வழக்கப்படி இறங்கினதும் இரண்டாவது வகுப்புப் பெட்டிக் கெதிரே போய் நின்று கொண்டேன். என் நண்பரின் தமையன் பிள்ளை மக்கன் என்பவன் "ஓ ராவ் சாஹேப்! ராவ் சாஹேப்!" என்று மூச்சு வாங்கக் கூப்பிட்டுக் கொண்டே ஓடி வந்தான்.

"ஏன் மக்கன்ஜி! சௌக்கியந்தானே!" என்று கேட்டுக் கொண்டே நான் அவன் கையில் என் பையைக் கொடுத்தேன். ஆனால் என் பார்வை மட்டும் ரயிலில் என்னுடன் கூட வந்த—வேட்டியைத் தூக்கிக் கொண்டு எஞ்ஜின் பக்கம் ஓடிய வாலிபன்மீதே இருந்தது. அவன் நாலைந்து தடவை 'சகலியா, சகலியா' என்று கூப்பிட்டான். கடைசியில் அவன் கூப்பிட்ட சகலியா அவனுக்குக் கிடைத்துவிட்டான். ஆகவே, அந்த மனிதன் அவனுடன் பேசுவதற்காக அவன் இருந்த பெட்டிக்குள்ளேயே ஏறிவிட்டான்.

* * *

அவர்கள் பேச்சு முடிவதற்குள்ளாகவே என்ஜின் புறப்படுவதற்கு அறிகுறியாக ஊதிவிட்டது. கார்டு வந்து சட்டென்று அந்தப் பெட்டியின் கதவை அறைந்து சாத்தினான். அதைக் கண்ட அந்த ஆசாமி கீழே இறங்க முயன்றான். அதைக் கண்ட அந்தப் பார்ஸி கார்டு, "ஏய், உட்காரு! செத்து விடுவாய்! வீட்டில் சொல்லிக் கொண்டு வந்தாயா! எங்கேயாவது விழுந்து கிழுந்து செத்துத் தொலைக்கப் போகிறாய்!" என்று எச்சரித்து விட்டு நகர்ந்தான். அதற்குள் வண்டி நகரத் தொடங்கி விட்டது. பாவம், அந்த ஆசாமி இறங்கும் வகை அறியாமல் வண்டிக்குள்ளேயே தங்கி விட்டான்.

அந்தப் பெண்மணியும் குழந்தையும் என்ன ஆவார்கள்! அவர்களை அழைத்துப் போக யாராவது ஸ்டேஷனுக்கு வந்திருப்பார்களா! இந்த ஆசாமி இவர்களை எங்கெல்லாந்தான் தேடுவான் இவர்கள் நிலை என்ன ஆகும்! — இம்மாதிரியான பாரமார்த்திக எண்ணங்கள் அலை அலையாக என் மனத்தில் எழுந்தன.



ஜன்னல் வழியே.........

இதே சமயம் மக்கன்ஜி, "ராவ் சாஹேப்! இங்கேயே நில்லுங்கள். இன்னும் வந்திருப்பவர்களையும் அழைத்து வருகிறேன்" என்றான்.

"சரி, சரி, போய்ச் சீக்கிரம் அழைத்து வா!" என்று சொல்லிப் பிளாட்பாரத்தில் ஒரு முறை பார்வையைச் செலுத்தினேன்.

மக்கன்ஜி கொஞ்ச தூரம் சென்றவன் திரும்பி வந்து, "சார்! நீங்கள், அதோ நிற்கிறது பாருங்கள், அந்த வண்டியில்போய் உட்காருங்கள். நான் இதோ வந்து விட்டேன்!" என்று சொல்லி விட்டு மற்ற பிரயாணிகளை அழைத்து வருவதற்காகச் சென்றான்.

தயாள்ஜிபாய் வீட்டுக்கு இந்த ரயிலில் ஆண், பெண் அடங்கலாகப் பத்து வண்டிகள் நிறைய விருந்தினர்கள் வருவதாயிருந்தனர். வண்டிகளில் விருந்தினரை ஏற்றி விடுவதற்காக மக்கன்ஜி இங்கும் அங்கும் ஓடியாடிக் கொண்டிருந்தான். என்னுடன் கூடவே ரயிலில் வந்த கிழவர் தோசாயும் 'பரபர' வென்று பம்பரமாகச் சுற்றிக் கொண்டு காரியத்தில் கண்ணாயிருந்தார்.

"ராவ் சாஹேப்! உங்களுடன் இந்த உபாத்தியாயரும், இந்த சேட்ஜியும் வருவார்கள். நீங்கள் புறப்படலாம்!" என்று தூரத்தில் இருந்த வண்ணமே மக்கன்ஜி கூச்சலிட்டான்.

ஆமதாபாத் வாசியான ஒரு சேட்டும் சூரத் தலைப்பாகை தரித்த ஒரு உபாத்தியாயரும் என் வண்டியை நோக்கி வந்தார்கள். நாங்கள் மூவரும்

வண்டி யேறிப் புறப்பட்டோம். அந்தப் பெண்ணின் கதி என்ன ஆகும் என்ற கவலையில் நான் ஆழ்ந்திருந்தேன். என் மூளை இந்தச் சிந்தனையில் வேகமாகச் சுழன்று கொண்டிருந்தது. அதற்கேற்றாற்போல வண்டியின் சக்கரங்களும் 'கட கட'வென்று சுழன்று வண்டியின் வேகத்தை அதிகப்படுத்திக் கொண்டிருந்தன.

சிறிது நேரத்துக்கெல்லாம் எங்கள் வண்டியைத் தாண்டிக் கொண்டு இன்னொரு வண்டி இன்னும் வேகமாகப் போயிற்று. அதில் அந்த வயது முதிர்ந்த தேசாய் தம் மனைவியுடன் உட்கார்ந்திருந்தார். என்னைப் பார்த்த தேசாய் ஓடும் வண்டியில் இருந்த வண்ணமே, கையினால் ஜாடை காட்டி, ஏதோ சொன்னார். "எல்லோரையும் சௌகரியமாக உட்கார வைத்து விட்டேன்!" என்று சொல்வதுபோல என் காதில் விழுந்தது. அவர் சொன்னதற்குப் பதில் சொல்ல வேண்டிய அவசியம் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை.

இவ்விதம் மாட்டு வண்டிகளின் சக்கரங்களிலிருந்து எழுந்த புழுதியினால் மூச்சுத் திணற ஐந்து மைல் கடந்து நாங்கள் பார்சுவா கிராமத்தை அடைந்தோம். என் நண்பர் குசலப் பிரச்னம் விசாரித்து விட்டு, ஜில்லா கலெக்டர் தம்மை எப்படி எல்லாம் ஆட்டி வைத்தார் என்பதை யெல்லாம் சொன்னார். பிறகு, 'எனக்கு அந்தப் பதவி எப்பொழுது கிட்டும்?" என்று கேட்டார். இம்மாதிரி இன்னும் எத்தனை எத்தனையோ கேள்விகள் கேட்டார். எத்தனை கேள்விகள் கேட்டு என்ன! என் கண்களிலிருந்து நாணமே உருவான அந்த நங்கையின் சிரித்த மதிமுகத்தை அவருடைய அந்தக் கேள்விகளால் அகற்ற முடியவில்லை.

ஏது எப்படிப் போனால் என்ன! நண்பர் என்னைத் தம் அன்புப் பிணைப்பில் கட்டியே போட்டுவிட்டார். நான் வந்திருந்த விருந்தினர்கள் அனைவருக்கும் நடு நாயகமாக விளங்கினேன்! எனக்குக் காட்டிய மரியாதை சொல்லத் தரம் அன்று. அந்தக் கல்யாணச் சந்தடியிலும், எனக்கு ஏகப்பட்ட ஆசார உபசாரங்கள் செய்தார். அந்த ஊரில் உள்ள இன்னும் சில பிரமுகர்கள் வீட்டுக்கு என் சார்பில் அவரே அழைப்பை ஏற்றுக் கொண்டு, முன் வந்து நடத்தி வைத்தார். நான் தங்குவதற்கு வசதியாகத் தம் வீட்டுக்கு எதிர் வீட்டிலேயே பிரமாதமான ஏற்பாடுகள் செய்து வைத்திருந்தார். இந்த ஆசார உபசாரங்களையும் மரியாதையையும் கண்ணுற்ற நான் அகமகிழ்ந்தேன். இந்த இலாகாவுக்கு நான் கலெக்டராக வந்தால், நண்பரின் இந்த ஆசார உபசாரங்களை நினைவில் வைத்துக் கொண்டு, அவருக்கு ஏதாவது நல்லது செய்வதென்று மனத்தில் திட சங்கற்பமும் செய்து கொண்டேன்.

தயால்ஜி பாய் தாமே நான் தங்கும் விடுதி வரைக்கும் என்னுடன் வந்தார். என்னுடைய பையை அங்கே கொண்டு வந்து வைக்கச் செய்தார். நான் அதிலிருந்து அல்பக்காக் கோட்டு, புது வேட்டி, புது அங்கவஸ்திரம் முதலியவற்றை எடுத்து அணிந்து கொண்டு கல்யாணக் கூடத்தை அலங்கரிக்க என்னைத் தயார் செய்து கொண்டேன். என் நண்பர் மெதுவான குரலில், "ராவ் சாஹேப்! உத்தரவு வந்து விட்டதா!" என்றார்.

"எதற்கு!" என்று வியப்புடன் கேட்டேன்.

"நீங்கள் நம் ஜில்லாவுக்குக் கலெக்டராக வரப் போவது உண்மைதானே!" என்று இனிமையாகக் கேட்டார் அவர்.

அப்படியா சமாசாரம்! இவ்வளவு மரியாதை-மட்டுக்குக் காரணம் இதுவா! சில நாட்களுக்கெல்லாம் அந்தப் பதவிக்குத் தேர்ந்தெடுப்பதாகத் தான் பேச்சு உலாவி வந்தது. நண்பரின் நம்பிக்கைக் கோட்டை தகர்ந்து நான் வேறு ஜில்லாவுக்குப் பிரதம மாஜிஸ்டிரேட்டாக நியமிக்கப்பட்டாலும் படலாம். என்ன ஆகும் என்று யார் கண்டார்கள்! ஆனால் நண்பரின் நம்பிக்கையில் அவநம்பிக்கையை உண்டாக்க நான் விரும்பவில்லை; ஆகவே, 'அதற்குத் தானே நான் பூனாவுக்குப் போயிருந்தேன். ஆனால் யாரிடமும் சொல்லி விடாதீர்கள்!" என்று சொல்லி அவருடைய பிரமையைப் பிரமையாகவே இருக்கும்படி மழுப்பி வைத்தேன்.

"அட! எனக்குச் சொல்ல வேண்டுமா!" என்று சொல்லிவிட்டுத் தயால்ஜி என்னைத் தம் வீட்டுக்குத் தேநீர் அருந்த அழைத்துச் சென்றார்.

"ராவ் சாஹேப்! நான் இந்த மாடிப் படிக் கதவைக் கீழே தாளிட்டு விடுகிறேன். காலை வேளையில் யாரும் உங்கள் தூக்கத்தைக் கலைத்துத் தொந்தரவு கொடுக்காமல் இருக்க வேண்டும் அல்லவா!" என்றான் மக்கன்ஜி.

"ரொம்ப சரி!" என்று சொல்லி நான் படியேறி எச்சில் துப்ப ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தேன். இதற்குள் மக்கன்ஜி கீழே கதவைத் தாளிட்டுக் கொண்டு போய்விட்டான். நான் தூங்குவதற்காக அறைக்குள் நுழைந்தேன். ஒரு மூலையில் ஸ்டேஷனில் பார்த்த அதே பெண் உட்கார்ந்து தூங்கி வழிந்து கொண்டிருந்தாள்.

"ஆ"—என் வாயிலிருந்து என்னையறியாமலே இந்த வார்த்தை எழுந்தது. என் குரலைக் கேட்டு அந்தப் பெண் எழுந்து நின்றாள். 'ஆ! நீங்களா! இங்கே எங்கே!" என்று கேட்டாள். இருவரும் கலவரத்துடன் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டு நின்றோம். (அடுத்த இதழில் முடியும்.)




## சிரியா

முதலில் இந்தியாவிலிருந்து புறப்பட்டுக் கைபர் கணவாய் வழியாக ஆப்கானிஸ்தானத்துக்கு வந்தோம் அல்லவா?

ஆப்கானிஸ்தான், ஈரான், ஈராக், சௌதி அரேபியா, யெமன், ஓமான், எகிப்து, பாலஸ்தீனம், டிரான்ஸ் ஜார்டன் முதலிய ஒன்பது மத்திய கேந்திர நாடுகளைப் பிரதட்சிணமாகச் சுற்றிக்கொண்டு, இப்போது சிரியாவுக்கு வந்திருக்கிறோம்.

ஆயிரக்கணக்கான வருஷங்களாக அன்னியர்களிடம் அடிமைப்பட்டுக் கிடந்த சிரியாவுக்குச் சமீப காலத்தில்தான் சுதந்திரம் கிடைத்தது.

பாலஸ்தீனத்தைப் போல் சிரியாவும் மிகப் புராதனமான தேசம். கி. மு. இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன் சிரியா என்ற பெயர் அந்த நாட்டுக்கு ஏற்பட்டதெனில் அது எவ்வளவு பழமையானது என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

சிரியா தேசத்தின் பண்டைய சரித்திரம் கிறிஸ்தவ வேதமான பைபிளில் கூட விவரிக்கப் பட்டிருக்கிறது.

ஒரு காலத்தில் சிரியாவுடன் பாலஸ்தீனமும் லெபனனும் சேர்ந்திருந்தன. பிறகு தான் அவ்விரு நாடுகளும் சிரியாவிலிருந்து பிரிக்கப்பட்டன.

ஆதி காலத்தில் தெற்கு சிரியா முதன்முதலாக யூதர்களின் தாயகமாக இருந்தது. பிறகு அது கிறிஸ்துவ மதத்தின் பிறப்பிடமாகியது. கிறிஸ்துவ சகாப்தம் ஆறாவது நூற்றாண்டில் அந்த நாட்டின் மீது முஸ்லிம்கள் படையெடுத்தனர். அன்றிருந்து இன்று வரையில் அது அராபியர் நாடாகவே இருந்து வருகிறது.

சிரியா சரித்திரத்தைப் பார்ப்போமாயின், அந்த நாடு சதா சர்வ காலமும் அன்னியர்களின் ஆதிக்கத்துக்கு இலக்காகி வந்திருப்பதை அறிந்து கொள்ளலாம்.

பண்டைய காலத்தில் அது முறையே அசைரியா, பேபிலோனியா, ரோமிய சாம்ராஜ்யங்களின் கீழ் இருந்தது. பிறகு அந்த நாட்டின் மீது அராபியர்கள் படையெடுத்து அதைத் தங்கள் வசப்படுத்திக் கொண்டனர். 1000-ல் அங்கு மதப் போரில் ஈடுபட்ட ஐரோப்பிய வெறியர்களின் ஆட்சி ஏற்பட்டது. அதிலிருந்து நூறு ஆண்டுகளுக்குப் பின் அவர்களை எகிப்தியர்கள் விரட்டி விட்டுத் தங்கள் ஆட்சியை அமைத்தனர். 1516-ல் சிரியா துருக்கியர்களிடம் வீழ்ச்சி யுற்றது. முதலாவது மகா யுத்தம் வரையில் அது துருக்கி சாம்ராஜ்யத்தின் ஒரு பகுதியாகவே இருந்து வந்தது. அப்போது பிரிட்டிஷ் துருப்புகள் படையெடுத்து வந்து துருக்கியர்களை விரட்டி விட்டன.

ஏற்கெனவே பிரிட்டனும் பிரான்சும் செய்து கொண்டிருந்த இரகசிய ஒப்பந்தத்தின் பலனாக சிரியாவில், முதலாவது மகா யுத்தத்துக்குப் பின் பிரஞ்சுக்காரர்களின் ஆதிக்கம் ஏற்பட்டது மேற்படி ஆதிக்கத்தை எதிர்த்துச் சிரியா மக்கள் புரட்சி செய்தனர். எனினும் அவர்களுடைய புரட்சி வெற்றி பெறவில்லை. கடைசியில் 1022-ம் வருஷத்தில் சர்வ தேச சங்கம், சிரியாவைப் பிரஞ்சுக்காரர்களின் மேற்பார்வையில் உள்ள ஒரு தேசமாக அங்கீகரித்தது.

அத்துடன் சிரியர்களின் எதிர்ப்பு நின்று விடவில்லை. அவர்கள் மேலும் தொடர்ந்து பிரஞ்சுக்காரர்களின் ஆதிக்கத்தை எதிர்த்துப் புரட்சி செய்து வந்தார்கள். அவர்களுடைய எதிர்ப்பைச் சகிக்க முடியாமல் பிரஞ்சுக்காரர்கள் கடைசியாக வழிக்கு வரும்படி ஆயிற்று. 1030-ம் ஆண்டில் சிரியா மக்களுக்குச் சுதந்திரம் கொடுப்பதாக அவர்கள் வாக்களித்தனர்.

1939-ம் ஆண்டு பிறந்தது. ஆனால் பிரஞ்சுக்காரர்கள் தங்களுடைய வாக்குறுதியை நிறைவேற்ற முற்படவில்லை.

அந்த வருஷத்தில் இரண்டாவது உலக மகா யுத்தம் மூண்டதால், ஜெர்மானியர்கள் சிரியாவுக்குள் பிரவேசித்தனர். அவர்களை விரட்டுவதற்காகப் பிரிட்டிஷ், பிரஞ்சுத் துருப்புகளும் சிரியாவுக்குள் பிரவேசித்தன.

1941-ம் வருஷத்தில் சிரியாவில் இருந்த பிரஞ்சு தளபதி நேசதேசங்களின் சார்பில் சிரியா ஒரு சுதந்திர நாடு என்று பிரகடனம் செய்தார். அதுவரையில் சிரியாவில் ஒரு பாகமாக இருந்த லெபனன் அப்போதுதான் தனி நாடாகப் பிரிக்கப்பட்டது.




1945-ம் ஆண்டில் சிரியா நேச தேசங்களுடன் சேர்ந்து கொண்டு அச்சு நாடுகளின்மீது யுத்தப் பிரகடனம் செய்தது.

இரண்டாவது மகா யுத்தம் முடிந்த பின்னரும்கூடச் சிரியாவில் அமைதி ஏற்படவில்லை. நேசநாடுகளின் சுதந்திரப் பிரகடனம் வெறும் தந்திரம் என்பது வெளியாயிற்று. பிரெஞ்சு சர்க்கார் தாங்கள் அளித்த வாக்குறுதியின்படி அந்த நாட்டுக்குச் சுதந்திரம் கொடுக்காததுடன், தங்கள் துருப்புகளைக் கொண்டு வந்து அந்த நாட்டை மேலும் அடிமைப் படுத்த முற்பட்டார்கள்.

அப்போது பிரெஞ்சுத் துருப்புகள் லெபனானில் வந்து இறங்கியதால் லெபனான் மக்கள் எங்கு தங்களுடைய சுதந்திரத்துக்கும் ஆபத்து ஏற்படுமோ என்று கலங்கினர்.

பிரெஞ்சுக்காரர்களை எதிர்த்துச் சிரியாவில் கலகங்கள் ஏற்பட்டன. சிரியா தெருக்களில் சிரியர்களுக்கும் பிரெஞ்சுத் துருப்புகளுக்கும் கோரமான சண்டைகள் நடந்தன. அதனால் ஆயிரக்கணக்கான சிரியா மக்கள் பலியாயினர். பல நாட்கள் வரையில் உக்ரமாக யுத்தம் நடந்தது.

எனினும் கடைசியாக ஒரு சமரசம் ஏற்பட்டது. 1946-ம் வருஷம் ஏப்ரல் மாதத்தில் சிரியாவும் லெபனானும் பூரண சுதந்திரம் பெற்றன என்பதற்கு அறிகுறியாக, அந் நாடுகளிலிருந்த அன்னியத் துருப்புகள் எல்லாம் வெளியேறின. இன்று சிரியா ஒரு குடியரசாகத் திகழ்ந்து வருகிறது.

* * *

ஐம்பத்து நாலாயிரத்து முந்நூறு சதுர மைல் விஸ்தீர்ணம் உள்ள சிரியா நாட்டின் ஜனத்தொகை சுமார் முப்பது லட்சமாகும்.

சிரியாவில் உள்ள ஜனங்களில் பெரும்பாலோர் விவசாயத்தையே ஜீவனமாகக் கொண்டிருக்கிறார்கள். அங்கு கோதுமை, சோளம் பார்லி, பருத்தி முதலியவை உற்பத்தியாகின்றன.

விவசாயத்துக்கு அடுத்தபடியாக சிரியா மக்கள் ஆடுமாடுகளின் பராமரிப்பை முக்கியத் தொழிலாகக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் இன்றும் ஆயிரக் கணக்கான வெள்ளாடுகள், ஒட்டகங்கள், எருதுகள், கழுதைகளை வளர்ப்பதன் மூலம் ஜீவனம் செய்து வருகிறார்கள்.

போக்குவரத்து, கல்வி முதலிய பல துறைகளிலும் சிரியா மிகவும் பிற்போக்கான நிலையில் இருந்து வந்தது. பல நூற்றாண்டுகளாக அந்த நாடு அன்னியர்களிடம் அடிமைப்பட்டிருந்ததே அத்தகைய அதிருப்திகரமான நிலைமைக்குக் காரணம். எனினும் அது சமீப காலமாக கல்வித் துறையில் ஆச்சரியகரமாக முன்னேற்றம் அடைந்திருக்கிறது.

சிரியாவின் தலைநகரான டமாஸ்கஸ் உலகத்தில் உள்ள மிகப் புராதனமான நகரங்களில் ஒன்றாகும். யூதர், கிறிஸ்துவர் மதச் சரித்திரத்தில் மனதைக் கலக்கும் பல முக்கிய சம்பவங்கள் அங்குதான் நிகழ்ந்தன.

மத்திய ஆசியாவில் டமாஸ்கஸ் ஆயிரக் கணக்கான ஆண்டுகள் வியாபாரத்தின் ஹிருதய ஸ்தானமாக விளங்கி வந்தது.

டமாஸ்கஸ் நகரில் உற்பத்தியாகும் எஃகுப் பட்டாக்கத்தி ஒரு காலத்தில் உலகப் பிரசித்தி பெற்றிருந்தது.

சிரியா பாலைவனத்துக்கு அருகில் டமாஸ்கஸைப் போன்ற ஓர் அழகிய நகர் இருப்பது ஆச்சரியம்தான். அந் நகர் அற்புதமான நந்தவனங்களாலும் பழத் தோட்டங்களாலும் சூழப் பட்டிருக்கிறது. எனினும் டமாஸ்கஸ் நகரின் தெருக்கள் அசுத்தமாகவும் குறுகலாகவும் ஆபாசமாகவும் இருப்பது, அந்த நகருக்கு ஒரு பெரும் களங்கம் என்றே சொல்ல வேண்டும்.

முஸ்லிம்களின் புண்ணிய ஸ்தலமான மெக்காவுக்குச் செல்லும் உலக யாத்ரீகர்கள் டமாஸ்கஸ் நகருக்கு வந்து, அங்கிருந்துதான் மெக்காவுக்குப் புறப்படுவார்கள்.

ஈராக்கிலிருந்து மத்தியதரைக் கடல் துறைமுகத்துக்குச் செல்லும் எண்ணெய்க் குழாய்கள் சிரியா நாட்டின் வழியாகத்தான் செல்லுகின்றன.

சிரியாவை அடுத்துள்ள லெபனான் மிகச் சிறியதொரு நாடு. சுமார் நாலாயிரம் சதுர மைல் விஸ்தீரணம் உள்ள இந்த நாட்டில் பதினொரு லட்சம் ஜனங்கள்தான் வசிக்கிறார்கள். இவர்களில் சுமார் நாலு லட்சம் பேர் முஸ்லிம்கள்; கிறிஸ்துவர்களும் யூதர்களுமாக ஆறு லட்சம் பேர்களுக்கு மேல் இருக்கிறார்கள்.

லெபனான் சிறிய நாடாயினும் அராபியர்களின் எழுச்சியில் இது முக்கிய பங்கு எடுத்துக் கொண்டு வந்திருக்கிறது.

இந்த நாட்டில் பிரெஞ்சுக்காரர்களின் நிர்வாகத்தில் ஒரு சர்வகலாசாலையும் அமெரிக்கப் பாதிரிமார்களின் நிர்வாகத்தில் ஒரு சர்வகலாசாலையும் இருக்கின்றன.

# தித்திக்கும் தேன் மலர்!

இந்த ஆண்டு "கல்கி தீபாவளி மலரை"ப் படிக்கும் பாக்கியத்தை நான் நேற்று பெற்றேன். அதைப் பாக்கியம் என்றுதான் சொல்லவேண்டும்.

மலரைப் பிரித்தவுடன் அழிவற்ற மலர்கள் நிறைந்த, அழகிய பூஞ்சோலைக்குள் செல்வது போல் இருந்தது. அவ்வளவும் சிரஞ்சீவித் தன்மை பெற்ற வாடா மலர்கள். ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு வாசனை. ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு கருத்து. என் மன வண்டை ஈர்த்தது தங்களுடைய மலரின் மணம்.

அனைத்தும் கற்பனை உளியால் செதுக்கப்பட்ட கருத்துச் சிலைகள். சிந்தனைத் தூரிகையால் தீட்டப்பட்ட எழில் ஓவியங்கள்.

சித்திரங்களை எடுத்துக் கொண்டால் வர்ணிப்பதற்கு நேரம் இல்லை. மகேந்திரப் பல்லவரைப் பற்றிய சித்திரம் மனதைக் கவரத்தக்க முறையில் அமைந்துள்ளது. மணியம் வரைந்துள்ள இலங்கைச் சித்திரங்கள் சித்திரக் கலைக்கே ஒரு எடுத்துக் காட்டாக விளங்குகின்றன. எந்த மனவேகத்துடன் சிற்பி அந்தச் சிலைகளைச் செதுக்கினானோ, அதே சிந்தனை ஓட்டத்தை அவர் ஓவியங்களில் காண முடிகிறது. கண்ணகியின் வாழ்வைச் சித்திரங்களாகக் காட்டியிருப்பதும் போற்றுதற்குரியது. கனுதேசாய் படங்களில் ஒரு நிரந்தரக் கவர்ச்சி யிருக்கிறது. பாரதியின் கனவுகளைச் சித்திரங்களின் மூலம் நனவாக்கிவிட்டார்கள்.

கதைகளும், கட்டுரைகளும் வானத்தை எட்டிப் பிடித்திருக்கின்றன.

ஸ்ரீமான் ராஜகோபாலாச்சாரியார் தமக்கே உரித்தான எளிய நடையில் தர்மோபதேசம் செய்வது மிகவும் அழகாக இருக்கிறது.

"ஒற்றை ரோஜாப் பூ"வின் ஆரம்பமே தனியாக அமைந்திருக்கிறது. முடிவு மிகவும் பிரமாதம். சாகவேண்டும் என்று அருவியில் விழப் போனவன், அதைப் பார்த்துப் பிரமித்து நிற்பது மிகவும் ஆச்சரியமான முறையில் சித்திரிக்கப்பட்டுள்ளது. கதை முழுதுமே ஒரு கவர்ச்சி. ஒரு மர்மம். மகுடியின் முன் ஆடும் நாகம்போல, "ஒற்றை ரோஜாப் பூ"வைப் படிப்பவன், அதன் வசப்படவேண்டியதுதான்.

கதைகள் அனைத்தும், வளர்ந்து வரும் தற்காலத் தமிழ் இலக்கியத்தின் சின்னங்கள். தெள்ளத் தெளிந்த நீரோடையைப் பார்ப்பதில் உள்ள ஒரு சந்தோஷமும், குற்றமற்ற குழந்தையின் சிரிப்பைக் கேட்பதிலுள்ள ஒரு ஆனந்தமும் தங்கள் மலரைப் பார்ப்பதால் ஏற்படுகிறது.

திருவல்லிக்கேணி
30—10—51
தி. சு. சங்கரன்

★

தங்கள் தீபாவளி மலரை கண்ணுற்றேன். மலரில் இது வரை வந்திராத சில அற்புத காட்சிகள் உள்ளன. அநுராதபுரத்துக் கோயில்களின் சிற்பங்கள்—இலங்கைச் சித்திர மலர்—கண்ணைக் கவருகின்றன. தமிழ் உலகுக்குத் தொண்டு புரியும் தாங்கள் "பொன்னியின் செல்வன்" கதையின் மூலம் நம் பழந்தமிழ் நாட்டின் புராதனப் பண்பாடுகளையும், பெருமைகளையும் எழுதுவதோடல்லாமல், அவைகளை நேரில் கண்டு தரிசித்த பாக்கியம் என்னே! தான் மட்டும் அனுபவித்து விடாமல் தமிழ் மக்களுக்கும் அந்த இன்பத்தை நுகரச் செய்யும் பொருட்டு தாங்கள் தங்கள் சுற்றுப் பிரயாணத்தை "நம் தந்தையர் செய்த விந்தைகள்" என்பதன் மூலம் வெளியிட்டிருப்பது எல்லாருக்கும் மகிழ்ச்சி தரும் விஷயம்.

சென்னை
30—10—51
எம். சேஷன்

★

கலை வளர்த்த தம்பதிகளின் ஓவியத்தை முகப்புப் படமாகத் தாங்கி வந்திருக்கும் இந்த வருட "கல்கி" மலர் தீபாவளியை கலைத் தீபாவளியாக்கிவிட்டது என்றால் மிகையில்லை! வள்ளுவர் வாக்கும், கம்பன் கவிதையும், இளங்கோவின் சிலம்பும், பாரதி பாடலும், மலரில் ஆங்காங்கே மிளிர்ந்து தென்றலை அள்ளுகின்றன. அறிஞர் பெருமக்களின் காவிய நயம் பொருந்திய எழுத்தோவியங்களுக்கு ஈடாக நமது "சித்திரக்காரப் புலிகளின்" வண்ண ஓவியங்களும் சேர்ந்து மலரை கவர்ச்சிகரமாக ஆக்கிவிட்டன.

கதைகளிலே "நிரந்தரச் செல்வம்" மக்கள் மனதில் என்றென்றும் நிலைத்திருக்க வேண்டிய நல்லதொரு உபதேசம். "அனந்த மத்தாப்பு" "கைதி சொன்ன கதை" "தியாக சிகரம்" முதலிய கதைகள் உள்ளத்தைத் தொடும் உணர்ச்சி சிகரங்களாய் அமைந்துள்ளன. "காவியும் கதையும்" நல்ல ஹாஸ்ய விருந்து. "ஒற்றை ரோஜாப் பூ" (தீபாவளி) மலர்ப் பூங்காவில் மணம் பரப்பும் மலர்களுள் ஒரே ரோஜாவாகத் திகழ்கின்றது!

"இன்பக் கதைகள் எல்லாம் உன்னைப்போல்
ஏடுகள் சொல்வதுண்டோ!"

என்று கேட்ட பாரதியார் இன்றிருந்தால் அவரிடம் இந்த 'கல்கி' மலரைக்காட்டி நான் "அப்படி ஒரு ஏடு உண்டென்றால் அது இதுவே, அது இதுவே!" என்று துணிந்து கூறுவேன்.

கலை மணம் பரப்பும் ஒரு வாடாத கதம்ப மலரைத் தீபாவளிப் பரிசாக தமிழ் கூறும் நல்லுலகத்திற்குத் தந்தமைக்கு எனது நன்றி.

கடலூர் புதுநகர்
30—10—51
எஸ். எஸ். மூர்த்தி

★

"கல்கி தீபாவளி மலர்" கிடைக்கப் பெற்றேன். மலர் மிகவும் உயர்ந்த முறையில் அமைந்தது பற்றி மகிழ்ச்சி அடைகிறேன். அட்டைப் படம் நல்ல கருத்துடன் தீட்டப்பட்டிருக்கிறது. உயர் குலத்தில் உதித்த—ராஜ குடும்பத்தைச் சேர்ந்த ஒரு ராஜகுமாரி கலைவாணிக்கு மலரைச் சமர்ப்பிக்கிறாள். ராஜகுமாரி சமர்ப்பிக்கும் (கல்கி) மலர் மணத்திலும், குணத்திலும் குறைந்து இருக்குமா, என்ன!

மலர் நறுமணம் கமழும் வாடாமலர் மட்டுமல்ல. அது ஒரு "நிரந்தரச் செல்வ"மாகப் பாதுகாக்கப் படவேண்டிய ஒரு கலைப் பொக்கிஷமும் என்பது என் அபிப்பிராயம். மலரிலே தமிழின் முப்பெரும் பிரிவுகளான இயல், இசை, நாடகம் என்ற முத்துறைக்கும் சம சந்தர்ப்பம்

அளிக்கப்பட்டிருக்கின்றன. மலரிலே நவ ரஸமும் ததும்பி இருக்கிறது.

வீரத்துக்கு நமது தாய்நாட்டின் விடுதலைக்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே பாடுபட்ட "தியாக சிகரமாக" விளங்கும் கட்டபொம்முவின் சரித்திரமும், தேசிங்குராஜனின் சரித்திரமும் தகுந்த சாட்சியங்களாக விளங்குகின்றன. பெண்மையின் வீரத்துக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகிறது கற்புக்கரசி கண்ணகியின் சித்திரச் சரித்திரம்.

ஹாஸ்யத்துக்கு சாமாவின் கேலிச் சித்திரங்களும், "ஹாஸ்ய வெடி"களும் தகுந்த சான்றுகளாக விளங்குகின்றன. மற்றும் "பாடும் கற்கள்" என்ற ஆராய்ச்சிக் கட்டுரையும், "நம் தந்தையர் செய்த விந்தைகள்" என்ற ரஸமான வர்ணனைகள் கொண்ட "கல்கி"யின் பிரத்தியேக நடையுடன் கூடிய பிரயாணக் கட்டுரையும் மலரின் அழகுக்கு அழகு செய்கின்றன.

ஆகவே, கலைவாணி மலர்ந்த உள்ளத்துடன் இந்த "கதம்ப" மலரை மகிழ்வுடன் ஏற்றுக் கொள்வாள் என்பதில் சந்தேகம் இல்லை.

மொத்தத்தில் வழவழவென மினுக்கும் ஆர்ட் காகிதத்தில் பளபளவென ஜொலிக்கும் "இலங்கைச் சித்திரத்துடன்" கூடிய இந்தக் "கல்கி" மலருக்குத் தாராளமாக ஐந்து ரூபாயும் கொடுக்கலாம், ஐம்பது ரூபாயும் கொடுக்கலாம்.

அரசவனங்காடு
30—10—51

ஜி. மஹாலிங்கம்

*

"கல்கி" மலர் நல்கிய களிப்புக் கடலில் மூழ்கிப்போய் கரையேறமாட்டாமல் மூச்சுத் திணறிக்கொண்டே இதை எழுதுகிறேன்.

கண்ணைப் பறிக்கும் வண்ணச் சித்திரங்களும், கலைமணங்கமழும் கதை கட்டுரைகளும் கன்னித் தமிழின் கலைச் சுவை பொழுகும் கவிதைக் கோயில்களும், நகைச்சுவை ததும்பும் விகடத் துணுக்குகளும் அடங்கிய 'கல்கி' மலர் கலையுலகிலேயே தலை சிறந்ததுதான். ஆயினும் அதனால் எனக்கு எவ்வளவு சிரமம் தெரியுமா! மதுவிலக்கு அமுலிலிருக்கும் இக் காலத்தில் நீங்கள் இப்படிச் செய்யலாமா! உங்கள் செந்தமிழ் மலரினின்றும் வடிந்த தீந்தமிழ்த் தேனை மாந்தியதில் மயக்கம் வேறு வந்துவிட்டது. மலரிலுள்ள ஹாஸ்யத் துணுக்குகளைப் படித்து விழுந்து விழுந்து சிரித்ததில் மண்டையில் வேறு காயமுண்டாகியதுடன், வயிற்று வலி வேறு ஏற்பட்டுவிட்டது. அதற்காக டாக்டர் வீட்டுக்கு நான்கு முறை நடந்து கால்வலி வேறு ஏற்பட்டு விட்டது. அப்புறம் அவர் சமர்ப்பித்த 'பில்'லைப் பார்த்ததும் மண்டையைப் பிளக்கும் தலைவலியே உண்டாகி விட்டது.

மலரை நுகர்ந்து அனுபவித்ததும், "ஆஹா! காகிதப் பஞ்சம் கடுமையாகத் தலைவிரித்தாடும் இக்காலத்தில் என்ன அழகிய 'கலைமணங் கமழும்' மலரைச் சிருஷ்டித்திருக்கிறார்கள்!" என்று எண்ணிய மாத்திரத்தில் என் உள்ளம் குளிர உடலும் உவகைப் பெருமிதத்தால் குப்பென்று பூரித்துப் போய் விட்டது. அந்த வேகத்தில் பட்டென்று கரங்களில் அணிந்திருந்த புது மாதிரிக் கண்ணாடி வளையல்கள் நான்கும் சட்டென்று உடைந்து போய்விட்டன. பார்த்தீர்களா! வயிற்று வலி, தலைவலி, கால்வலி, வளையல் நஷ்டம், ஆகியவற்றை யெல்லாம் உண்டாக்கி வைத்து விட்டது உங்கள் மலர்! இதற்கெல்லாம் சேர்த்து உங்கள் மேல் வழக்குத்தொடுத்தால் என்ன என்று தோன்றுகிறது.

சென்னை
29—10—51

குமாரி லோசனா தேவி

# கீறல் கிருஷ்ணன்

டி. ஆர். வேம்பு

கடைசியாக ஸ்ரீ கோதண்ட கல்யாண ராமனையும் தரிசித்தாயிற்று. தீர்த்தம், துளசி தளம், சடாரி இவைகளைச் சாதித்த பின்பு சந்நிதி பட்டர் என்னைப் பார்த்த பார்வையில், "ஏதாவது காணிக்கை உண்டோ, சுவாமிக்கு?" என்ற வினயமான கேள்வி தோய்ந்திருந்ததைக் கவனித்தேன். சந்நிதிக்குச் சந்நிதி வெள்ளி நாணயம் காணிக்கையாகப் போட ஆரம்பித்தால், திவாலாக வேண்டியிருக்கும் என்ற நினைப்பு எழவே, மௌனமாக வெளியில் வந்தேன்.

சந்திர புஷ்கரணியில் தோய்ந்து தவழ்ந்து வந்த காற்றின் வாடை, அதை ஒரு 'புண்ணிய தீர்த்தம்' என்று விளம்பரப்படுத்தியது. ஒவ்வொரு சந்நிதிக்கும் என்னை அழைத்துச் சென்று, அங்கு எழுந்தருளியிருந்த தெய்வங்களை எனக்கு அறிமுகம் செய்து வைக்கும் கைங்கர்யத்தை ஏற்றுக் கொண்டிருக்கும் பெரியவர் என்னருகில் வந்து நின்றார்.

"என்ன சுவாமி, வேறு ஏதாவது பெருமாள், ஆழ்வார் சந்நிதிகள் பாக்கி இருக்கின்றனவா தரிசனம் செய்ய?" என்று கேட்டேன். அவரது பொக்கை வாயின் அடியில் தோன்றிய முறுவல், "என்ன, அதற்குள்ளாகவா அசந்து விட்டது, கட்டை?" என்று ஏளனம் செய்வது போலிருந்தது.

அப்பா! ஸ்ரீரங்கம் கோவில்தான் எவ்வளவு பெரிது! சந்நிதிகள் ஒன்று விடாமல் ஏறி இறங்கித் தரிசித்ததால் உண்டான புண்ணிய மூட்டையின் பளு ஏறியதாலோ என்னவோ, அசதி அதிகமாயிற்று.

"கீறல் கோபாலகிருஷ்ணன் சந்நிதி ஒன்றுதான் பாக்கி; வாருங்கள், போவோம்!" என்று கூறி முன்னால் சென்றார் பெரியவர்.

மிகவும் ஒடுங்கிய பிராகாரத்தின் மத்தியில் குறுகலான கர்ப்பக் கிருஹத்தில், எண்ணெய் விளக்கின் ஒளியில் நான் கண்ட காட்சி! சுமார் இரண்டடி உயரமுள்ள கிருஷ்ண விக்கிரகந்தான்! அதில் எத்தனை வேலைப்பாடுகள்! உணர்ச்சிகளைத் தட்டி எழுப்பக்கூடிய தெளிவுகள்! கொடி போன்ற அந்த இடையில்தான் எவ்வளவு சாதுர்யமான ஒடிசல்! லாகவமாகக் கைகளை வளைத்துக் குழலை உதட்டில் வைத்துக் கந்தர்வகானம் செய்வது போன்ற அந்த பாவம்! உதட்டில் மலர்ந்த அந்தப் புன்சிரிப்பில்தான் எத்தனை கவர்ச்சி! உயிரற்ற கல்லில் உணர்ச்சி அலைகளா? உயிரின் துடிப்பா?

ஒரு கணம் கிருஷ்ணனது வேய்ங்குழலின் இனிய நாதம் என் செவிகளில் ரீங்காரம் செய்வது போன்ற உணர்ச்சி உண்டாயிற்று!

"என்ன சுவாமி, பெருமாளுடன் ஐக்கியமாகி விட்டீர்கள் போலிருக்கிறதே?" — பரிகாசம் தோய்ந்த அவ்வினா இழையோடிய என் சிந்தனையைத் தடுத்து நிறுத்தியது.

'பட பட'வென்று அடித்துக் கொண்டு முகத்தில் அறைவது போல் சுற்றி வட்டமிட்டன இரு வௌவால்கள். தீய்ந்து போன திரியின் நாற்றம் மூக்கைக் குடைந்தது. மங்கிக் கொண்டிருந்த ஒளியில் மங்காத ஜோதியுடன் பிரகாசித்த கண்ணனைக் கண்ணாரக் கண்டு வெளியில் வந்தேன்.

சந்நிதியை விட்டுக் கீழிறங்குகையில், "'கீறல்' கிருஷ்ணன் என்பது பெருமாளின் பெயர். மூர்த்தி சிறியது; ஆனால் கீர்த்தி பெரிது, சுவாமி!" என்றார் பெரியவர்.

"'கீறல்' கிருஷ்ணன் என்று அடைமொழி சேர்க்கிறீரே? பிரதிஷ்டை செய்தவர் பெயரோ?" என்று வினவினேன்.

"இல்லை! சுவாமி, இல்லை! விக்கிரகத்தின் முதுகில் மூன்று கீறல்கள் காணப்படுகின்றன; அதுதான் காரணம்! அது ஒரு கதை அல்லவா? ஸ்ரீரங்கம் ஆராவமுதாச்சாரியாரைப் பற்றி நீங்கள் கேள்விப் பட்டிருக்கலாமே?..." என்று மிகவும் பலமான பீடிகையுடன் ஆரம்பித்தார்.

சந்நிதிக்கெதிரில், சற்றுத் தள்ளி மணலில் களைப்பாற அமர்ந்தேன். பெரியவரும் உட்கார்ந்து கதையைச் சொல்ல ஆரம்பித்தார்.

* * *

சுமார் இரு நூற்றைம்பது வருடங்களுக்கு முன் ஸ்ரீரங்கத்தில் வசித்தவர் ஆராவமுதாச்சாரியார். மிகுந்த ஆசாரமும் தெய்வ பக்தியும் உடையவர்; நேர்மையும், ஒழுக்கமும் படைத்தவர். வேத, வியாகர்ண சாஸ்திரங்களைக் கற்றுக் கரைகண்ட நிபுணர். பல மொழிகளில் பாண்டித்தியம் பெற்றவர்.

தலைமுறை தலைமுறையாகக் கோவில் பட்டர் தொழிலை மேற்கொண்டு பகவத் கைங்கர்யத்தில் ஈடுபட்டிருந்தனர் அவருடைய மூதாதையர். ஆகவே, அவரும் அத்தொழிலை விருப்பமுடன் ஏற்றுச் சேவை செய்து வந்தார்.

ஓர் இரவு குழலூதும் கண்ணன் கனவில் தோன்றி, "கோவில் சந்திர புஷ்கரணி தீர்த்தத்தில் நான் மூழ்கிக் கிடக்கிறேன். உன் கைகளால் என்னை வெளியில் எடுத்து, புஷ்கரணிக் கரையிலேயே மேற்கு நோக்கி என்னைப் பிரதிஷ்டை செய், ஆராவமுதா..." என்று கூறினார்.

பகவான் திருவுருவ தரிசனத்துக்குப் பிறகு தூக்கம் வருமா? அமுதனைக் கண்ட கண்களல்லவா? தூக்கம் எப்படி வரும்?

மறு நாள் காலை. நியம, நிஷ்டைகளை முடித்துக்கொண்டு புஷ்கரணிக்கு விரைந்து சென்றார். ஊரே திரண்டு வந்தது காண. தேர்ந்த நீச்சல்காரர்களை ஏவி விக்கிரகத்தைத் தேடச் சொன்னார். துருவித் துருவித் தேடினர்; மூலை முடுக்குகளில் மூழ்கி மூழ்கித் துழாவினர்.

விக்கிரகம் கிடைக்கவில்லை!

ஆச்சாரியார் புரண்டு அழுதார்; கதறினார். "ஐயோ! தெரியாமல் அபசாரம் செய்து விட்டேனோ? உன் வாக்கு பொய்க்கலாமா? ஹே கண்ணா! கிருஷ்ணா!" என்று பிரலாபித்தார். மனம் நைந்து உருகி நயனத்தின் வழியே நீர் தாரையாக ஓடிப் புஷ்கரணியில் சங்கமமாகியதுதான் மிச்சம்!

இரண்டாம் நாள் இரவு. அதே கனவு; இம்மியும் பிசகாத அதே கட்டளை! பொழுது புலர்ந்தது. மிகுந்த மடி, ஆசாரத்துடன் புஷ்கரணிக்குச் சென்றார். முன்னாள் போலவே, பல நீச்சல்காரர்களை விட்டுத் தேடச் சொன்னார். புண்ணிய தீர்த்தம் கலங்கியது. கிருஷ்ண விக்கிரகம் கிடைத்தால்தானே? தெய்வ குற்றமோ? என்ன அபசாரம் நேர்ந்து விட்டதோ?

ஆச்சாரியாரின் முகம் சுண்டியது. சிறு குழந்தைபோல் புரண்டு அழுதார். "பகவான் வலுவில் என்னைத் தேர்ந்தெடுத்து, தரிசனம் கொடுத்துக் கட்டளை யிட்டார். அதை நிறைவேற்ற முடியவில்லையே?..." என்ற ஏக்கத்தில் மனம் உடைந்து போயிற்று. புஷ்கரணிக் கரையிலேயே அன்றிரவு படுத்து விட்டார், அன்ன ஆகாரமின்றி!

அன்றிரவு. மூன்றாம் முறையாகக் கனவில் கண்ணன் தோன்றினார். ஒரு வார்த்தைகூடப் பிசகவில்லை. "கோவில் சந்திர புஷ்கரணி தீர்த்தத்தில் நான் மூழ்கிக் கிடக்கிறேன். உன் கைககளால் என்னை வெளியில் எடுத்து, புஷ்கரணிக் கரையிலேயே மேற்கு நோக்கி என்னைப் பிரதிஷ்டை செய், ஆராவமுதா!' என்ற அதே கட்டளை பிறந்தது.

அப்போது தான் அவருக்கு உள்ளத்தில் ஒளி பிறந்தது. 'அடடா, பகவான் கட்டளைக்கு முதலிரண்டு நாளும் இழுக்கு ஏற்படுத்தி விட்டோமே! ஆண்டவன் என்னை ஏவினார்; ஆனால் நான் அப்புனிதமான காரியத்தைப் பிறர் கையில் அல்லவா ஒப்படைத்தேன்!' என்று மிகவும் மனம் வெதும்பினார்.



மறுநாள் காலை. ஊரே குழுமியிருந்தது புஷ்கரணியில்! மடி, ஆசாரம் துலங்கத் தூய ஆடையுடுத்தி வந்தார் ஆராவமுதனார். "கிருஷ்ணா, முகுந்தா...!" என்று உச்சரித்துக் கொண்டே இறங்கி விட்டார் புஷ்கரணியில்! அவருக்கோ நீச்சல் தெரியாது! புஷ்கரணியின் ஆழமோ இருபது அடிகளுக்கு மேல் இருக்கும். தவிர உள்ளே பல குறுகிய கிணறுகள் வேறு உண்டு. அவற்றில் சிக்கினால், அவ்வளவுதான்! அதிலிருந்து வெளி வர முடியாது.

சுவாமியின் தலை தண்ணீருக்குள் மறைந்தது. சிறு சிறு காற்றுக் கொப்புளங்கள் கழியிட்டன. ஒரே நிசப்தம்! ஒன்று, இரண்டு, மூன்று — மூன்று நாழிகைகள் கடந்தன. வேடிக்கை பார்க்கக் குழுமியிருந்த மக்களின் விழிகள் நீர் மட்டத்தில் பதிந்து, ஏதாவது அசைவு தென்படுகிறதா என்று ஆராய்ந்து கொண்டிருந்தன. ஒரு வேளை, சுவாமி மூழ்கி விட்டாரோ?

அப்போது, என்ன ஆச்சரியம்! கையில் இரண்டடி உயரமுள்ள கிருஷ்ண விக்கிரகத்துடன், பக்திப் பரவசத்தில் ஆடிப் பாடிக் கொண்டு, தெய்வீக தேஜஸுடன் வெளியில் வந்தார் ஆச்சாரியார்.

கண்ணன் கட்டளைப்படி 'தன் கைகளாலேயே' விக்கிரகத்தைப் புஷ்கரணியிலிருந்து வெளிக் கொணர்ந்து விட்டார்.

ஒரு நல்ல நாளில் புஷ்கரணிக்கரையில், மேற்கு நோக்கி, கிருஷ்ண விக்கிரகம் பிரதிஷ்டை செய்யப்பட்டது. அன்று முதல் அந்தச் சந்நிதிக்கு மட்டும், ஆராவமுதாச்சாரியாரே தினந்தோறும் நிவேதன, ஆராதனைகளும், திரிகால பூஜைகளும் மிகுந்த பக்தி சிரத்தையுடன் செய்யத் தலைப்பட்டார்.

* * *

மூச்சு விடாமல் சொல்லி வந்த பெரியவர், இந்த இடத்தில் சற்று நிறுத்தினார். கண்களில் ததும்பி நின்ற இரு நீர்த்துளிகளைத் துடைத்துக் கொண்டார்.

எங்கோ ஓர் சந்நிதியில் ஆராதனையின் போது முழங்கிய மேள சப்தம் அலை அலையாகத் தவழ்ந்து வந்து மெள்ள அடங்கியது.

"நீறல் கிருஷ்ணன் என்று அடைமொழி வரக் காரணம் கேட்டேன். அதைப்பற்றி நீங்கள் கூறிய வரலாற்றில் ஏதுமில்லையே, சுவாமி!" என்று வினவினேன்.

புன்னகை உதட்டை நெளிக்க, பெரியவர் சிறிது நேரம் மௌனமாக இருந்தார். பிறகு தொடர்ந்து சொல்லலானார்:

* * *

ஆராவமுதாச்சாரியார் வடமொழி, கிரந்தம், தமிழ், தெலுங்கு முதலிய பாஷைகளில் வல்லவர். நிறைந்த பாண்டித்தியம் பெற்றவர். அடிக்கடி தெய்வீக விஷயங்களைப் பற்றி உபந்நியாசங்கள் செய்வதுண்டு. பல நூல்களுக்குப் பாஷ்யங்கள் கூட எழுதியிருந்தார்.

ஒரு முறை ஊர்ப் பெரியோர் பலர் கூடி, அவரிடம் சென்று, பகவத் கீதையைத் தமிழில் மொழி பெயர்த்துத் தரும்படி வேண்டினர். ஆராவமுதனாரும் ஒப்புக் கொண்டார்.

பகவான் வாக்கு அல்லவா கீதை! மொழி பெயர்க்கும்போது சொற் சேதமோ, கருத்து பேதமோ ஏற்படக் கூடாதே! அதற்காக மிகவும் சிரமப்பட்டு, ஒவ்வொரு வார்த்தையாக, இல்லை! எழுத்து எழுத்தாக—கிதானமாக, ஆராய்ந்து கருத்துப் பிறழாமல் தமிழ்ப் படுத்திக் கொண்டு வந்தார்.

கீதையில் பகவான், "ஆதியும் நான்; அணுவும் நான். ஆதியும். அந்தமும் நான்; ஆத்மாவும், அந்தராத்மாவும் நான்; ஒளி நான்; ஒளிப்பதுவும் நான்; உணர்வு நான்; உணரப் படுவதும் நான்......" என்று வரிசையாக அருச்சுனனுக்குத் தான்தான் 'பிரம்மம், சர்வேஸ்வரன்' என்று எடுத்துக் கூறுகிறார். இதுவரை தொடர்ந்து மொழி பெயர்த்தாயிற்று.

அதற்குப் பிறகு பகவான் சொல்வதாக ஒரு அடி வருகிறது. "ஹே, அருச்சுனா! என்னை நம்பினவனுக்கு ஊன்றுகோலாக இருக்கிறேன். எவனொருவன் மனப்பூர்வமாக என்னை நம்பி, தன் சுக, துக்கங்களுக்கும், செயல்களுக்கும் என்னைப் பொறுப்பாளியாக்குகிறானோ, அவனுக்கு நான் அடிமை! இல்லை—அடிமைக்கு அடிமையாகி, அவனது சிறு சிறு இச்சைகளையும் கூட ஓடோடியும் சென்று பூர்த்தி செய்கிறேன்...!" என்று வருகிறது.

ஆராவமுதாச்சாரியாருக்கு அதில் சிறு மாறுதல் செய்ய வேண்டுமென்று தோன்றியது. இறைவனை மனிதனுக்கு அடிமையாக்க மனம் வரவில்லை! சரி, அடிமையாகவே இருக்கட்டுமே! பகவானே ஓடோடியும் சென்று மனிதனுடைய இச்சையைப் பூர்த்தி செய்ய வேண்டுமா? ஏன்? அவருக்குக் கீழ் கோடான கோடி தேவர்களும், கணங்களும் இல்லையா? -- இப்படி இழை ஓடியது அவர் மனம்!

எழுத்தாணியை எடுத்தார். ஓலை நறுக்கில் வைத்து, "அவனுக்கு அடிமைக்கு அடிமையாகி, அவனது சிறு சிறு இச்சைகளையும் கூட ஓடோடியும் சென்று பூர்த்தி செய்கிறேன்...!" என்ற வரியை மூன்று முறை எழுத்தாணியால் அழுந்தக் கீறி அடித்தார். அடித்த வரிக்கு மேல், "எனக்கு அடிமைகளாகிய தேவ, பூத கணங்களை ஏவி, அவனது சிறு சிறு இச்சைகளையும் கூடப் பூர்த்தி செய்விக்கிறேன்..." என்று மாற்றி எழுதினார்.

இதுகாறும் அடிமையாகி, கை கட்டிச் சேவகம் செய்து வந்த ஈஸ்வரனுக்கு விடுதலை அளித்து விட்டார்!

அன்றைய உணவுக்கு வீட்டில் அரிசியில்லை. உஞ்சவிருத்தி எடுத்து வருவதற்காகக் கிளம்பினார். எல்லாம் வல்ல இறைவனுக்கு விடுதலை அளித்து விட்டோம் என்ற இறுமாப்பில் பூரித்திருந்தது அவர் உள்ளம்.



கல்யாண வீட்டில் ஒருவர் (அப்பொழுதுதான் வந்து கொண்டிருக்கும் ஒரு ஸ்திரீயைப் பார்த்து):—வாருங்கள், வாருங்கள்! நீங்கள் பெண்ணுக்கு வேண்டியவர்களோ?

ஸ்திரீ:—இல்லை! நான் கல்யாண மாப்பிள்ளையின் தாயார்!

அன்று பெய்த அடை மழை போல் ஒரு நாளும் பெய்ததில்லை! மின்னலும், இடியும் விண்ணைப் பிளந்தன! மழை மண்ணைக் கரைத்தது! சண்டமாருதம் வீசியது!

ஆச்சாரியாருடைய மனைவி, வைதேகி அம்மையார், கவலையே உருவாகக் கணவன் வரவுக்காகக் காத்திருந்தாள். அப்போது கொட்டும் மழையில், சுமக்க முடியாத மூட்டை ஒன்றைச் சுமந்து கொண்டு படியேறினான் ஒரு சிறுவன். வந்த சிறுவனை நோக்கினாள். கழற்காலில் உலகளந்த திருவடி கண்டாள்! வசீகரத் திருமேனி கண்டாள்! மண் தின்ற வாய் கண்டாள்! அருள் நோக்கு கண்டாள்! வேய்ங்குழல் கையில் கண்டாள்!

வந்தவனை 'வா' வென்று அழைக்கவில்லை! "என்ன மூட்டை? யாருடையது?" என்று கேட்கவில்லை! சிறுவனின் வதனத்தில் ஒளிர் விட்ட தெய்வீக ஜோதியில், கண்களில் சுடர் விட்ட அருள் நோக்கில், அன்புப் பெருக்கில், ஞானவாரிதியில் உணர்விழந்து, செயலற்றுக் கட்டுண்ட நாகம்போல் நின்று விட்டாள்!

மூட்டையைக் கீழிறக்கி விட்டுச் சிறுவன் சொன்னான்: "அம்மா! தங்கள் கணவர் தான் என் எஜமானர். நான் அவரது அடிமை! அவருக்காகக் கொண்டு வந்தேன் இந்த மூட்டையை. கொட்டும் மழையில் சிரமப்பட்டு முதுகில் சுமந்து வந்தேன்! அதற்குத் தங்கள் கணவர் கொடுத்த தண்டனையைப் பாருங்கள்!" சிறுவன் முதுகைத் திருப்பிக் காண்பித்தான். சின்னஞ் சிறு முதுகில், குறுக்காக, அழுந்தக் கீறிய மூன்று கோடுகள் காணப்பட்டன. புண்ணிலிருந்து ரத்தம் கசிந்தது.

ஐயோ! தெய்வ ஜோதியுடன் பிரகாசித்த அப்பாலகனுக்கு அக் கொடுமை செய்ய எப்படி மனம் வந்ததோ?

வைதேகி அம்மையாருக்குக் கண்களில் நீர் சுரந்தது. "என் அப்பனே! கண்ணா! அவரை மன்னித்து விடு. திருவடிகள் நோக,

திருமேனி வருந்த, நீ மூட்டை தூக்குவதா? அதற்குத் தண்டனை வேறா? அபசாரம்... அபசாரம்...! கண்ணா, அவரை மன்னித்து விடு!'—'ஹோ' வென்று கதறி அழுது கொண்டு விழுந்தாள் கண்ணன் பாதங்களில்.

மாயன் மறைந்து விட்டான்.

* * *

சொட்டச் சொட்ட வெறுங் கையுடன் நுழைந்தார் ஆராவமுதனார். கொட்டும் மழையில் பிக்ஷை கிடைக்கவில்லை போலும்! "அமுதனை"க் கண்ட ஆனந்த பரவசத்தில் கண்ணீர்விட்டு அழும் மனைவியைக் கண்டார். நடந்ததை அறிந்தார். மூட்டை அரிசியில் கண்ணனின் வண்ணங்கண்டார்! தம் மனைவிக்குக் கிடைத்த பாக்யம் தமக்குக் கிடைக்கவில்லையே என்று கதறி அழுதார்!

அன்று ஊரே அல்லோல கல்லோலப் பட்டது! கோவிலில் கோபாலகிருஷ்ண விக்கிரகத்தின் முதுகில் திடீரென்று மூன்று கீறல்கள் தோன்றி, ரத்தம் கசிந்து கொண்டே இருந்தால், ஆச்சரியத்துக்குக் கேட்பானேன்? என்றுமில்லாத, கற்பனைக்கும் எட்டாத அதிசயம்!

அதிர்ச்சியடைந்த ஊர் மக்கள் விக்கிரகத்தின் அருகில் நெருங்கக் கூட அஞ்சினர்.

செய்தி ஆச்சாரியார் செவிகளை எட்டிற்று. அவர் கைகளால் பிரதிஷ்டை செய்யப்பட்ட விக்கிரகமாயிற்றே! ஓடோடியும் வந்தார். முதுகில் மூன்று கீறல்களைக் கண்டார்; ரத்தப் பெருக்கைக் கண்டார்; வாயடைத்து நின்றார்! அவர் செய்த அந்தச் செயலா, இத்தனை விபரீதங்களுக்கும் காரணம்? ஈசனை அடிமைத்தனத்திலிருந்து விடுதலை அளித்து விட்டதாகக் கருதினார். ஆனால் அந்த ஈசுவரன் அவருக்கே அடிமையாக வந்தல்லவா மூட்டை சுமந்தார்! ஓலை நறுக்கில் இழுத்த கீறல் பகவான் முதுகில் விழலாயிற்றே!

விரைந்து சென்றார் வீட்டுக்கு. ஓலையில் தான், புதிதாகச் சேர்த்து எழுதிய வரிகளை நீக்கினார். முன்பு தான் அடித்துவிட்ட வரிகளை மறுபடி புகுத்தினார். ஒரு முறை படித்துப் பார்த்தார்: "அவனுடைய அடிமைக்கு அடிமையாகி, அவனது சிறு சிறு இச்சைகளையும் கூட ஓடோடியும் சென்று பூர்த்தி செய்கிறேன்......" பிறகுதான் அவரது மனம் நிம்மதியுற்றது!

* * *

ஆவேசம் வந்தவர் போல் கதை சொல்லி வந்த பெரியவர், இந்த இடத்தில் நிறுத்தினார். கன்னங்களில் வழிந்தோடிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டார். சிறிது நேரம் இருவரும் பேசவில்லை.

"என்ன பெரியவரே! கதை முடிந்து விட்டது போலிருக்கிறதே?" என்று கேட்டு, மௌனத்தைக் கலைத்தேன்.

கிழவர் கனைத்துக்கொண்டு சொன்னார்:

"கதை இல்லை சுவாமி! உண்மையில் நடந்தது. இன்னமும் இதோ எழுந்தருளியிருக்கும் கோபால கிருஷ்ணன் முதுகில் குறுக்காக மூன்று வடுக்கள் இருக்கின்றன. முன்பெல்லாம், பிரதி மாதமும் துவாதசியன்று அந்த வடுக்களிலிருந்து ரத்தம் கசிவதுண்டாம். இப்போது அது நின்று விட்டாலும், பிரத்தியட்சமாகக் காணலாம் அந்த மூன்று வடுக்களையும்! ஓலையில் பதிந்த கீறல், பெருமான் முதுகிலும் பதிந்தது! அதனால் ஏற்பட்ட மூன்று வடுக்களையும், பக்தர் ஒருவரால் ஏற்பட்ட 'அன்பு வடுக்க'ளாகக் கொண்டு விட்டார் தம் முதுகில்! அதனால் பகவானுக்குக் கீறல் கிருஷ்ணன் என்ற அடை மொழியும் வந்தது......!"

* * *

நன்றாக இருட்டி விட்டது. எங்கோ பளிச்சிட்ட மின்னல் ஒளியில், வானளாவிய கோபுரம் பயங்கரமாகக் காட்சி அளித்தது. சந்நிதிக் கதவுகளை 'படார், படார்' என்று மூடும் சப்தம் கேட்டது. கீறல் கிருஷ்ணன் சந்நிதியை இருள் கவ்விக் கொண்டிருந்தது.

சந்நிதியை நோக்கி ஒரு கும்பிடு போட்டு விட்டு எழுந்தேன். பெரியவர் கையில், நல்ல வெள்ளி நாணயமாகப் பொறுக்கி, நான்கு ரூபாய்களை வைத்தேன். முதுமையால் சுருங்கிய தன் கண்களை அகல விரித்தார் கிழவர். கீறல் கிருஷ்ணன் சந்நிதியைப் பார்த்தார். என்னைப் பார்த்தார். "மூர்த்தி சிறியதானாலும், கீர்த்தி பெரிது, சுவாமி! கீறல் கிருஷ்ணன் உங்களுக்கு ஒரு குறைவும் வைக்க மாட்டான்! மறுபடி ஸ்ரீரங்கம் வந்தால், அடியேனை மறந்து விடாதீர்கள்! இந்தச் சந்நிதியிலேயே என்னைக் காணலாம்..." என்று சொல்லும் பொழுது அவர் குரல் தழுதழுத்தது.

பெரியவரிட மிருந்து விடை பெற்றுக் கொண்டேன். அவரை மறக்க முடியுமா?

**ஜுவல் பதித்த ரோ. கோ. கை கடிகாரங்கள் ரூ. 18-8-0**



ஸ்விஸ் தயாரிப்பு. சரியான நேரத்தைக் காட்டும் கடிகாரங்கள் பத்து வருஷ உத்தரவாதம். ரோ. கோ. கேஸ். வட்டம் அல்லது நீண்ட சதுர வடிவம் 7 ஜுவல் ரூ. 18-8-0; உயர் ரகம் க்ரோம் கேஸ், நடு செகண்டு முள்ளுடன் ரூ. 20/-; லேடீஸ் சைஸ் 8 ஜுவல் ரோ. கோ. கேஸ். ரூ. 23/-; நீண்ட சதுரம் க்ரோம் கேஸ் 8 ஜுவல் ரூ. 23/-; 15 ஜுவல் தட்டை வடிவம் ரூ. 30/-; நீண்ட சதுர வடிவம் 9 ஜுவல் ரோ. கோ. கேஸ் ரூ. 26/-; உயர்ந்தது ரூ. 28/-; 15 ஜுவல் ரோ. கோ. ரூ. 35/-; பாக்கெட் கடிகாரம் ரூ. 14/-.



ஸிகரெட் லைட்டர்: நிக்கல் கேஸ் லைட்டர் மிகவும் சிக்கனமானது. இதை வாங்கினால் ஆயுள் பூராவும் நீங்கள் நெருப்புக் குச்சி வாங்க வேண்டிய அவசியமே இல்லை. விலை ரூ. 2/-; உயர் ரகம் ரூ. 3/-; சிறந்தது ரூ. 4/- & 5/- ஒரு டஜன் கற்கள் அணா 14.
யு. எஸ். ஏ. பவுண்டன் பேனாக்கள்: ரோல்டு கோல்டு நிப்பு. கிளிப்புடன் ரூ. 2/-; உயர்ந்தது ரூ. 2/8/- ரோல்டு காப்புடன் (பார்க்கர் 51 போன்றது) ரூ. 5/8/-; உயர்ந்தது ரூ. 6/8/- தபால் செலவு அணா 14. இரண்டு ... ஆர்டர் செய்வோருக்கு தபால் செலவு இலவசம்

**IMPERIAL WATCH CO. (K)**

**Post Box No. 12220 : CALCUTTA - 5**

---

## மலச்சிக்கல், வயிற்றுவலி, பித்தம் ஆகியவற்றை குணப்படுத்திக் கொள்ளுங்கள்

**மருந்து போர்ட் அங்கீகரித்துள்ள இந்த ஔஷதம் புத்துயிரும் புதிய உணர்ச்சியும் அளிக்கிறது.**

மலச்சிக்கல் உங்கள் வாழ்வையே பாழ்படுத்தக் கூடியது. அது பெருந்தொல்லைகளையும் துன்பங்களையும் தரத்தக்கது. மருந்து போர்ட் அங்கீகரித்த பைல் பீன்ஸை ஒழுங்காக உட்கொண்டு ஆபத்தான நோய்களிலிருந்து மீட்சி பெறுங்கள். பைல் பீன்ஸ் உங்கள் குடலை ஒழுங்கான முறையில் இயங்கச் செய்கிறது. ரத்தத்தைச் சுத்தி செய்கிறது. உங்களை சோர்வும் அயர்ச்சியும் அடையச் செய்யும் கொடிய அசுத்தங்களை அகற்றுகிறது. பைல் பீன்ஸ் உங்களை வயிற்றுவலி, பித்தம், தலைவலி, மசமசப்பு, மற்ற இதர நோய்களினின்றும் பாதுகாக்கிறது. பைல் பீன்ஸ் சாதுக்கு வழிவகுக்கிறது. எனவே அஜீரணம் உண்டாகுமே, பசி குன்றிப் போகுமே என்கிற பயம் ஏதுமின்றி நீங்கள் உங்களுக்கு வேண்டியதைச் சாப்பிடலாம். பைல் பீன்ஸ் உங்களுக்குப் புத்துயிர், புதிய உணர்வு, வாலிபம் ஆகியவற்றை அளிக்கும். பைல் பீன்ஸ் உங்களது கண்களுக்கு ஒளியும், தேகத்திற்கு காந்தியும் தந்து உங்களை ஒல்லியாகவும் வசீகரமாகவும் தோன்றச்செய்யும்.

மருந்து போர்டார் அங்கீகரித்துள்ள உண்மையான பைல் பீன்ஸையே ஒழுங்காக உட்கொள்ளுங்கள் எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்




FBY: 6

---

# நீரிழிவு

## ஏழு நாட்களில் குணமாகும்!

எவ்வளவு நாட்பட்டதாயினும், மிகக் கடுமையாக இருப்பினும் நவீன ரஸாயன முறைத் தயாரிப்பான வீனஸ் சார்ம் வியாதியை முற்றிலும் குணமாக்கி விடும். அடங்காத பசி, மரண தாகம், அடிக்கடி சிறுநீர் பிரிதல், சொரி சிறங்கு ஆகிய இவைகளே இவ் வியாதியின் முக்கிய அறிகுறிகள். இதை கவனிப்பின்றி விட்டு விட்டால் கட்டி, பிளவை, கண் கோளாறு முதலிய உபத்திரவங்களில் முடியும். வீனஸ் சார்ம் ஆயிரக்கணக்கானவர்கள் மரிப்பினின்றும் பிழைக்க உதவியுள்ளது. உபயோகித்த மறு தினமே நீரிலுள்ள சர்க்கரைச் சத்தைக் குறைத்து இதமளிக்கும். இரண்டு மூன்று தினங்களில் பாதி குணமடைந்ததாக நீங்களே உணர்வீர்கள். ஆகார நிபந்தனை இடையாது. இலவசமான விபரங்கள் அடங்கிய காட்லாகிற்கு எழுதவும்

**50 மாத்திரைகள் கொண்ட பாட்டில் ரூ. 6-12-0**

(தபால் செலவு இலவசம்)

**வீனஸ் ரிஸர்ச் லாபரடரி (K.M.)**

**தபால் பெட்டி நெ. 587, கல்கத்தா**


உறுதியான
தேகதிடம்
நீங்களும்
பெறுக
வாட்டர்பரீஸ்
காம்பவுண்ட்
Waterbury's Compound
WATERBURY'S
COMPOUND
வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்
NAS 741


Wisdom
உங்கள் புன்னகை பிரகாசிக்க —
முத்துப் போல் வெண்மையான, ஆரோக்கியமான பற்கள் உங்கள் வசீகரத்தை அதிகரிக்கின்றன! விஸ்டம் டூத் பிரஷ் உபயோகித்து உங்கள் புன்னகையைப் பிரகாசிக்கச் செய்யுங்கள். விஸ்டம் டூத் பிரஷின் நைலான் குஞ்சங்கள் பற்களுக்குக் கேடு உண்டாகும் இக்கட்டான பல் இடுக்குகளுக்குள் புகுந்து சுத்தம் செய்யுமாறு அமைக்கப் பட்டிருக்கின்றன. சிறியவர்களுக்கும் பெரியவர்களுக்கும் ஏற்ற சைஸ்களில் உள்ள விஸ்டம் டூத் பிரஷ்கள் தூசி துப்பு புகமுடியாத உறைகளில் விற்கப்படுகின்றன.
டிஸ்ட்ரிபியூட்டர்கள்: ஜே. எல். மார்ஸன், ஸன் & ஜோன்ஸ் (இந்தியா) லிட்., தபால் பெட்டி 6527, பம்பாய் 26
— விஸ்டம் உபயோகியுங்கள்
சரியான உருவில் அமைந்துள்ள நைலான் டூத் பிரஷ்
WT 28



உலகெங்கும், வெற்றிபெற்ற மனிதர்கள்

# ஜில்லெட்

## உபயோகிக்கிருர்கள்...




ஒரு தனவந்தர்கூட, தினமும் ப்ளு ஜில்லெட் பிளேடை உபயோகிக்கும் சாதாரண மனிதனைவிட ஆனந்தமான க்ஷவரத்தை அனுபவிக்க முடியாது. மிகவும் கூராக தீட்டப்பட்ட இதன் விளிம்புகள் வழவழப்பான, சுகபோக க்ஷவரத்தை உங்களுக்கு அளிக்கிறது. மின்சாரத்தால் பதப் படுத்தப்பட்டதும், பிரத்தியேகமாக வழிவாக்கப்பட்டதுமான இந்த எஃகு பிளேடுகளால் அதிக தடவைகள் க்ஷவரம் செய்து கொள்ளலாம். விலை மிகவும் சரசமாயிருப்பதால், ஒவ்வொரு மனிதனும் உலகில் மிகவும் நாகரிகமான மனிதர்களின் விரும்பத்தக்க கூட்டத்தில் சேரலாம்.

# ப்ளூ ஜில்லெட் பிளேடுகள்

5 பிளேடுகளுக்கு 14 அணா

# அந்த வயிற்று வலியை இப்போதே குணப்படுத்திக் கொள்ளுங்கள்!

### அலக்ஷியப்படுத்தப் பட்ட அஜீரணம் ஆபத்தை உண்டாக்கும்.

உங்களுக்குப் பிடித்ததைச் சாப்பிட முடியாதபடி அஜீரணம் உங்களுக்கு ஏற்படுகிறது என்றால் நீங்கள் பாதி உயிருடன்தான் வாழுகிறீர்கள் என்று அர்த்தம். மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடர் உங்களுக்கு உதவியளிக்குமாக; அது உலகம் முழுவதிலுமுள்ள ஆயிரக்கணக்கான மக்களுக்கு உதவியளித்திருக்கிறது.

அஜீரணத்தினால் உண்டாகும் தொல்லை சில நிமிஷங்களுக்குள்ளாகவே துரித ரீதியில் மருந்து குணப்படுத்தும். அஜீரணத்துக்குள்ளான தேக நிலையைச் சரிப்படுத்தி உதவுவதற்கு மருந்து ஒரு தவணைக்கு உட்கொள்ள வேண்டும். அலக்ஷியப்படுத்தப்பட்ட அஜீரணம் ஆபத்தானது; ஞாபகமிருக்கட்டும். இன்றைய அசௌகரியம் நாளைய நோயாகமாறி இறுதியில் ஆபத்தானதும் குணப்படுத்த இயலாததுமான தேக நிலையை உண்டாக்கிவிடும். மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடரிடம் நம்பிக்கை வைத்து உட்கொண்டு ருசிகரமான பண்டங்களை மீண்டும் சாப்பிட்டு மகிழுங்கள். உங்களுக்கு இஷ்டமானபடி விதவிதமாகச் சாப்பிடலாம். அப்போதுதான் வாழ்க்கை வாழக் கூடியதாக இருக்கும்.




ஞாபகமிருக்கட்டும். மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடர் உலகப்பிரசித்தி பெற்றது. எனவே அநேகம் பேர் அதைக் காப்பியடிக்கப் பார்க்கிறார்கள். "அலெக்ஸ் ஸி.மக்ளீன்" என்ற கையொப்பம் இருக்கிறதா என்று பார்த்து உண்மையான சரக்கையே வாங்குங்கள்.

# மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடர்

வியாபார விவரங்களுக்கு: ஜே.எல்.மாரிசன்.ஸன் அண்ட் ஜோன்ஸ்(இந்தியா) லிமிடெட், மஹாலக்ஷ்மி கோவிலுக்கு எதிரில், வார்டன் ரோட், பம்பாய் 26.

MSY I TAM

# ஈயைக் கொல்லுங்கள்

—அவை டைபாய்ட், வயிற்றுக் கடுப்பு, காலரா, வயிற்றுப் போக்கு, க்ஷயம், ஆந்த்ராக்ஸ் முதலிய நோய்க் கிருமிகளை எடுத்துச் செல்லுகின்றன



• ஒரு தடவைக்கு 120 முட்டைகள் இடுகின்றன. ஒரே ஜோடி ஈக்களிலிருந்து சில வாரங்களுக்குள் லட்சக்கணக்கான சந்ததிகள் ஏற்பட்டுவிடக்கூடும்.

முட்டை கிளம்பியிலிருந்தே ஈ எருக்குழி, அழுகிய உணவுப் பதார்த்தங்கள், குப்பைகளங்கள் இவற்றிலேயே வாழ்கிறது. அதனுடம்பிலுள்ள சிறுசிறு ரோமங்கள் வழியாக இந்த அசுத்தங்களைப் போகுமிடமெல்லாம் ஏற்றிச்செல்கிறது. ஒரே ஈயில் 60,00,000க்கு மதிகமான ரோகக்கிருமிகள் காணப்பட்டுள்ளன!

ஞாபகமிருக்கட்டும்: ப்ளிட்டிலிருக்கும் 5 கொடிய பிடாசினிகள், ஈக்களையும் மற்ற எல்லாப் பூச்சிகளையும் துரிதமாகவும் நிச்சயமாகவும் கொல்லுகின்றன.

• உங்களிடையே நோயைப் பரப்புமுன் அதைக்கொல்லுங்கள்!




ஸ்டாண்டர்ட் வாக்குவம் ஆயில் கம்பெனி
(கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)




Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

REGD. NO M. 4392

Registered as a newspaper in Ceylon




L. 182-50 TM